உ

முருகன் துணை.

# சூரபத்ம நாடகம்.

இஃது,

திருக்கழுக்குன்றம்

ம-ா-ா-ஸ்ரீ, சுப்பராயமுதலியார் குமாரர்

அருணகிரிமுதலியார் கேட்டுக்கொண்டபடி

ஷை யூர், ம-ா-ா-ஸ்ரீ, அம்பலவாணமுதலியார் குமாரர்

வடிவேலுமுதலியாரவர்களால்,

இந்துஸ்தான்-பாரீஸ்-பதம்-கீர்த்தனம்-கிருதி-ஜாவளி

டோம்பிரி-தில்லாஞ-முதலான வர்னமெட்டுகளுடன்

இயற்றப்பட்டு,

---

சென்னை,

திரிபுரசுந்தரிவிலாச அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

முதல்பதிப்பு காபி 1000.

1905ஸு. ஏப்ரல் மீ

இதன் விலை.] [ரூபா 1-0-0.

---

உ

கடவுள் துணை.



# விளம்பரம்.

---

இதனால் சகலமான பேர்களுக்கும் தெரிவிப்பது யாதெனில் இகபரமளிக்கும் இரணியலாசூரன்கதையை இந்துஸ்தான் பாரீஸ் தில்லானு கீர்த்தனம் பதம் கிருதி டோம்பிரி முதலானவைகளால் நாடகவாயலாய் நடிக்க வமைத்து அச்சிட்டிருக்கும் புத்தகத்தை சென்னை முல்லாசாயப்புசந்து 7-வது நெம்பர் வீடு திரிபுரசுந்தரி விலாச அச்சிகூடத்தில் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை. ரூபா. 1-0-0. தபால்சார்ஜு பிரத்தியேகம்.

இப்படிக்கு

தி. அ. வடிவேலுமுதலியார்.

கணபதி துணை.

## சூரபத்ம நாடகத்தின்

# சாற்றுக்கவிகள்.

——(*)——

ம-ா-ா-ஸ்ரீ, கும்பகோணம் ஞானயோக சோதிடமணி
மந்திர ஔடதக்கடலாகிய

### சாமிநாதசுவாமியாரவர்கள் இயற்றிய,

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

கடலெழுந்த மருத்துவனுங் கலைமகளு முருவாகிக் கழுக்கு ன்றத்தில், அடலெழுந்த புனிதனெனு மம்பலவாணன்றவத்தா லவ தரித்தோன், மிடலெழுந்த சூரபத்மன் சரித்திரத்தை நாடகமாய் விளங்கச்செய்தான், மடலெழுந்தவாவியெனு மலைக்குரியோனிகர் த்தவுடி வேலன்றானே.

ம-ா-ா-ஸ்ரீ, கும்பகோணம்.

### சா. கிருஷ்ணசாமி பிள்ளையவர்கள் இயற்றிய,

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீர்மேவு சண்முகனே தன்புகழை யாவருக்குந் தெரிப்பா ன்மூவர், தார்மேவு கழுக்குன்றப் பதியில்வடி வேலனெனத் தன் பேர்பூண்டு, ஏர்மேவுமம்பலவா ணப்புனிதன் செய்தவத்தா லினி துவந்தே, தேர்மேவு சூரபத்மன் சரித்திரத்தை நாடகமாய்ச் செய் தான் மன்னே.

ம-ா-ா-ஸ்ரீ, கும்பகோணம்.

### அ. கிருஷ்ணசாமி நாய்க்கரவர்கள் இயற்றிய,

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

நீர்பூத்தவேணியரன் றனைக்கருதி வரம்பலவு நெறியிற்பெற் றுப், பேர்பூத்தவண்டங்கள் யாவையுந்தன் குடைகிழற்கீழ்ப்பிறங் கவாண்ட, கார்பூத்தநிறச்சூரன் காதைதனை நவரசமுங்கதிக்க மே லாஞ், சீர்பூத்தசெந்தமிழா லின்னிசைசேர் நாடகமாச்செய்தான் மன்னே. (க)

சிவனடியார் தமைக்காணி லவனெனவே வழிபாடு செய்யு மேலோன், பவவினைவே ரறுத்தருள்பஞ் சாக்கரமேயநுதினமும் பகருநாவோன், நவமணிசேர் கலனுகத்திருநீறுங் கண்மணியு நய ந்துபூண்போன், அவமிகுமூ விருபகையும் வென்றோன்சத்து வகு ணமே யமைந்துவாழ்வோன். (உ)

அன்றியு மென்பான்மிகவு நண்புடையோன் கழுக்குன்றத் தமர்ந்துவாழ்வு, துன்றிடுமம் பலவாணமுதலி முனமனமகிழ்ந்து துலங்கச்செய்த, வென்றிபுனை யருந்தவத்தாற் புத்திரனுத்தோன் றியிந்த மேதினிக்கண், நன்றியுறு வடிவேலுமுதலியென வபிதான நண்ணினனே.

உ

கணபதி துணை.

# சூரபத்ம நாடகம்,

## வண்டுவனப்பிள்ளையார் துதி.

அறுசீர்க்கழி நெடிலடியாசிரியவிருத்தம்.

அப்பாருஞ்சடைமுடியானளித்தருளும் வரத்தானன்கரசுசெய்து
முப்பாருந்தொழவிருந்த சூரன்தன்காதைதனைமுதிருமன்பால்
இப்பாருள்ளோர்மகிழநாடகமாச்சொலவேதளமிற்குன்றத்தார்
ஒப்பாருமில்லாத வண்டுவனப்பிள்ளையின்றாள் உன்னிவாழ்வாம்,

## சுப்பிரமணியர் துதி.

கந்தனைப்போன்மெய்ச்சூரன் கருதரும்கதையினைச்சோ
கந்தனைப்போக்கும்பண்ணுற் கதிக்குநாடகமாச்சொல்லக்
கந்தனைத்தீண்டும்சோலைக்கழுக்குன்றப்பதியில்வாழும்
கந்தனைப்போற்றிநாளும் கருத்தினுள்ளிருத்திவாழ்வாம்,

## பரமசிவன் துதி.

சடையானைமும்மலமாசடையானை அன்பர்களைத்தருமன்கையில்
படையானைமழுவெனுமாப்படையானை குறுமுனிக்குப்பரிவில்சொன்ன
விடையானைஅகிலமுணும் விடையானைஎணும்எண்ணம்மேவப்புற்றேல்
உடையானைகழுக்குன்றமுடையானை அநுதினமும்உன்னிவாழ்வாம்.

## அம்பிகை துதி.

மதியாளைமுகமெனுமாமதியாளை அறங்களெல்லாம்வளர்க்குஞான
முதியாளைஅடியவர்க்கிமுதியாளை அளித்தளித்துமுடிக்குநான்கு
கதியாளைஅழிதலில்சத்கதியாளை எணமுடியக்கலர்கள்நெஞ்சில்
மதியாளைகழுக்குன்றப்பதியாளை அனவரதம்பரவிவாழ்வாம்.

## குருவணக்கம் வெண்பா.

இன்னிசைசேர்நாடகமாய் ஏற்றமிகுசூரபத்மன்
தன்னிசைசேர்காதைதனைச் சாற்றுதற்கு—மன்னிசைசேர்
நச்சியப்பன்போற்கருணை நண்ணியெற்குக் கல்விதந்த
கச்சியப்பன் றாடுணையாம் காண்,

## சுப்பிரமணியர் தரு.

இ-ம்-பைரவி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

முருகாஎனக்கருள்செய்வாய் திருமருகா. (முருகா)

அநுபல்லவி.

முருகுமலர்தொடை மருவிஎதிருறு
நிருதரணியது சருவவமர்செய்யும். (முருகா)

சரணம்.

பாருமேயுன்னருட்கண்ணால் என்வினைதீருமே
பாரினுறுதுணை யாருமில்லைஎனைக்
காருமகிழ்வுடன் வாருமிதுததி. முருகா
சீலனேசின்மயனார்தந்த அருட்பாலனே
சீலமாமயிலேல ஏறிஇஞ்
ஞாலமேல்வடி வேலனேறக்கருள். (முருகா)

### வேதகிரீஸ்வரர் துதி விருத்தம்.

ஆதியாயநாதியாகி அகிலத்துக்கப்பாலாகி
சோதியாய்நிறைந்தேஎங்கும் துலங்குமைந்தெழுத்துமாகி
வேதமாமலையில்வாழும் வேதகிரீசாவுன்றன்
போதமேயருளெனக்குப் புண்யனேபோற்றிபோற்றி.

## வேதகிரீஸ்வரர் தரு.

இ-ம்-ஆனந்தபைரவி-ஆதி-தாளம்.

பல்லவி.

விடைஏறும்சடையா வாதிடஞானமூட்டு
கடையேனெனக்குகருணை வழிகாட்டு காலனையோட்டு. (விடை)

அநுபல்லவி.

தடையில்லாக்கொடையாய் தரணியில்புகழுடையாய்
திடமாயோடிஎன்னிடர் தீர்த்திடவருவாய் இதுததியாய்.(விடை)

சரணம்.

காலாகாலக்கோலா கபாலாதிரிசூலா
ஆலாலமூலா அடைந்தேனுனைசீலா
பாலன்வடிவேலன் பாடும்பதம்மேலா
ஞாலத்திலோங்கிடநாளுமேயநுகூலாகிருபைசெய்லோலா, விடை

## திரிபுரசுந்தரி தரு.

இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்

பலல்வி.

அம்பாதிரிபுரசுந்தரி அன்பனைவந்தாதரி. (அம்பா)

அநுபல்லவி.

அகிலலோகம்யாவும் அடக்கியாளும். (அம்பா)

சரணம்.

மூலக்காரணி மும்மலவினையற
மோனஞானத்தை மொழிகுவாயொளிபெற
மாலயன்போற்றும் மகிமையுடைய (அம்பா)

## சபைவணக்கம் விருத்தம்.

கோதிலாமறைகள்நான்கும் குலவுமங்கங்களாறும்
நீதிசேர்புராணமற்றும் நெறியியில்முக்குற்றம்நீங்க
ஓதியேயுணர்ந்தேஇந்த உன்னிதசபைக்குவந்த
தீதிலாப்பெரியோர்பாதம் சிரத்தினிலணிகுவேனே.

## அவையடக்கம் விருத்தம்.

இணங்குமைந்திலக்கணத்தோ டெழிற்கலைபலவுங்கற்றுக்
குணங்கொள்மாப்புலவர்முன்யான் குலவுறவிரும்புந்தன்மை
கணங்கொள்வெங்கதிரோன்முன்பு காணுமின்மினியைப்போலும்
மணங்கமழ்கமலவீமுன் மலருங்கொட்டியும்போலாமால்.

## விருத்தம்.

ஆடகமன்றுளாடு மண்ணல்பால்வரங்கள்பெற்றுப்
பீடமரண்டமெல்லாம் பிறங்கநன்கரசாள்சூரன்
பாடமைசரித்திரத்தைப் பகருநல்லிசைகளோங்கு
நாடகமாகச்சொல்வா னயந்துதோடயஞ்சொல்வேனே.

தோடயம்-நாட்டை-இ-ம்-ஜம்பைதாளம்.

தேவர்கள்பலரும்பணிசூரன் சிந்தித்தவெல்லாம்பெறுவீரன்
நாவருநற்புகழார்கதையை நாடகமாச்சொலவே-ஆ-ஆ
பூவருபிரமனேமுதலோர் போற்றுதல்செயவருள்புரியுமத
மாவதனப்பெருமான்கமல மலர்டிகள் துணையே-ஜெய-ஜெயா

அற்புதமார்ந்திடவண்டமெலா மாண்டருள்சூரனருங்கதையை
நற்புவியோர்முன்மின்னிசைசேர் நாடகமாச்சொலவே-ஆ-ஆ
சிற்பரநார்க்குமுன்ஞானவுப தேசமகிழ்ந்துரைசெய்தருளும்
பொற்றருமஞ்ஞையில்வருமுருகன் பொன்னடிகள் துணையேஜெய ஜெயா
நவமணிமாடமயேந்திரத்தை நன்கரசாளசுரேசனது
அவமறுகாதையைநாடகமா யன்புடனுரைசெயவே-ஆ-ஆ
தவமலியோகியர்சிந்தையுளே தங்கியிருந்தருள்செய்பவனும்
சிவபெருமானிருபங்கயநேர் சேவடிகள் துணையே-ஜெயஜெயா
சித்திகள்யாவையுமோர்நொடியில் சேர்தருசெயலதுறுஞ்சூர
பத்மனெழிற்கதைநாடகமாய்ப் பாரினுரைத்திடவே-ஆ-ஆ
முத்தியையன்பர்தமக்கருள்செய் முனிவகல்ஞானமிகுந்தவளாஞ்
சத்தியின்மணமலிதிருமலர்நேர்தாள்கள்வருந்துணையேஜெயஜெயா
மஞ்சினையொக்குநிறச்சூரன் மாயைவயிற்றில்வருந்தீரன்
தஞ்சமிலாக்கதைநாடகமாத் தாரணியோதிடவே-ஆ-ஆ
அஞ்சமெனச்சொலும்வாகனனூர் அன்புறநாவிலமர்ந்தருளும்
செஞ்சுவைநேர்மொழிவாணியிரு திருவடிகள் துணையேஜெயஜெயா
ஆனனமைந்துடையானிடமுன் னன்பில்வரம்பெறுசூரனது
ஈனமறுங்கதைநாடகமாய் இன்றமிழாற்சொலவே-ஆ-ஆ
வானளவும்புகழோங்கியசை வத்தைநிறுத்துமாசாரியராம்
ஞானமிகுத்தருள்நால்வர்பத நற்கமலந்துணையே. ஜெயஜெயா

மங்களம்-இ-ம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

மங்களம் மங்களம் மங்களம் நித்தியசுப
மங்களம் மங்களம் மங்களம். (மங்)

சரணம்.

திங்களைத்தரித்தவர்க்கும் தீங்கிலாவாழுமையாட்கும்
எங்குமிகப்பெயர்பெற்ற இணையிலாசூரனுக்கும்(மங்)
ஆயிரவருடகால மந்தரந்தவமிருந்து
போய்வரஇந்திரஜாலத்தேர் புகழ்கொண்டசூரனுக்கு(மங்)
நூற்றெட்டுயுகம்வரை நுவலஒருவரில்லா
ஏற்றுயிரத்தெட்டண்டம் இருந்தாண்டசூரனுக்கு(மங்)
விண்ணுலகவாசிகட்கும் விற்பன்னவிவேகிகட்கும்
தண்ணெடுவாழ்ந்துவிளங்கும் சகலஜெந்துக்களுக்கும்(மங்)
சமையாசாரிகளுக்கும் சாந்தமுனியந்தணர்க்கும்
அமைந்தமாதவத்தோர்க்கும் அகிலத்திலுள்ளவர்க்கும்(மங்)





முருகன்றுணை.

# சூரபத்ம நாடகம்.

## விநாயகர் வெண்பா.

ஆகுவெனும்வாகனனே அம்பிகையின்புத்திரனே
ஏகவுருவாகிஇருப்போனே—மோகமுடன்
சூரபத்மன்காதைதனைச்சொல்லிசைகொள்நாடகமாச்
சீருறயான்செய்ய அருள்செய்.

## விநாயகர் தரு.

இ-ம்-சஹானு-தாளம்-ரூபகம்.

அம்பிகைதனயனே அருளாகுவாகனனே
நம்பினேனுன்கிருபைதந்து கெம்பீரமாய்வந்து (அம்பி)
முத்திக்குவித்தாகி சுத்தநிற்குணமாகி
நித்தியமாய்வெற்றியெங்கும் சித்திபெறமிகவோங்கும் (அம்)
எந்தனிடர்தனைத்தீர்த்து என்றும்புகழக்கார்த்து
சிந்தைமகிழ்செய்குவையே சேயன்வடிவேலனையே (அம்)

## பொது விருத்தம்.

பரமனின்னருளினாலே பங்கயன்குலம்விளங்க
வரமதுபெறுங்காசிபன் மணந்திடமாயைதன்பால்
உரமதுநாளுமோங்க உதித்தநற்சூரன்வாசல்
திரமதாய்க்கட்டியன்தானும் சிறப்புடன்தோன்றினனே.

(பொது-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே? வீரமாமயேந்திரத்தை அரசாக்ஷிசெய்யும் சூரபத்ம மஹாராஜன் ஆசாரவாசற்காக்குங்கட்டியக்காரன் வருகிறவிதம் காண்பீர்கள்கனவான்களே

## பொது தரு.

இ-ம்-மத்தியமாமதி-ரூபகதாளம்.

பல்லவி.

கட்டியக்காரன் வந்தான் வந்தான் வந்தான் (கட்டி-)

சரணம்.

எட்டுத்திசைநடுங்க ஈட்டிவல்லயம்கத்தி
மட்டில்லாமலேதாங்கி கெட்டிச்சூரன்சபைக்கு (கட்டி)
வஞ்சகம்பேசுவோர் நெஞ்சைப்பிளந்திட
மிஞ்சியுக்கிரத்துடன் அஞ்சாத்தீரன்சபைக்கு (கட்டி)

(பொது-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே? வீரமாமயேந்திரத்தை யாளும்சூரபத்மமஹாராஜன் கொலுவிற்கு வருகிறவிதம் காண்பீர்கள், கனவான்களே.

## பொது தரு.

இ-ம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

இராஜராஜராஜன் வீரமாமயேந்திரத்தைத் தீரமுடனரசாளும்
சூரன்கொலு வீற்றிருக்கவந்தான். (இராஜ)

அநுபல்லவி.

அரிபிரம்மாதிதேவரும் அன்பாய்ஜெயங்கள்கோரிட
அரசர்சேனைத்தலைவர் அணிக்கூட்டங்கள்நேரிட. (இராஜ)

சரணம்.

முத்துத்தாழ்வடங்களும் மோகனமாலையும்
ரத்னமகுடமின்ன ரவைபதக்கங்கள்துன்ன
வாகுவலயமும் வயிரசரப்பணியும்
பாகுபுஜகிருது பட்டுடையும்விருது
வீரர்கட்டியங்கூற வெண்சாமரைகள்வீற
நாற்பதினாயிரம் நலம்பெறும்ரிஷிகளும்
நாயகனெனக்கோரி நயமிகுமாசிகூறி
நாடியாலவட்டங்கள் நன்முத்துக்குடைதாங்க
வேதங்களோதிட வெண்சங்கமூதிட
வாத்தியமுழங்கிட வையகம்களித்திட
அரம்பைமேனகையாட ஆக்ரமித்தவர்களோட
அண்டமாயிரத்தெட்டையும் ஆளநூற்றெட்டுகத்தையும் (இராஜ)

## சூரபத்மன் போற்றி விருத்தம்.

வேதமாமலையின்மீது விளங்கிடும்விமலாமுன்னம்
சோதனைசெய்துபார்த்துச் சோர்ந்துமேயழிந்தவென்னை
வாதையில்லாதெழுப்பி வாழ்ந்திடவரத்தைத்தந்த
நாதனேகாப்பாயுந்தன் நன்மலர்த்தாளேபோற்றி.

## மந்திரிதருமகோபன் போற்றி விருத்தம்.

ஆழாழிசூழ்ந்திருக்கும் அண்டமாயிரத்தோடெட்டும்
பாழிலாதரசியற்றும் பாக்கியவானேநாளும்
தாழ்விலாதமரர்யாரும் தகுந்ததோரேவல்செய்ய
மாழையாம்வரத்தைப்பெற்ற மன்னவர்போற்றிபோற்றி.

## மந்திரிதுன்முகன் போற்றி விருத்தம்.

தவத்தினைப்பெறுக்கச்செய்து தாழ்விலாதிருக்கப்பொல்லாப்
பவத்தினைமுற்றும்போக்கிப் பரமனின்னருளைக்கொண்டு
புவித்தனிலெவரும்போற்றப் பொலிதருசெங்கோலோடு
நவத்தனிக்குடைகொளெங்கள் நாதனேபோற்றிபோற்றி.

(கட்-வ-ம்.) பராக் பராக் இராஜகெம்பீரா பராக்.

## தேசவிசாரணை.

இ-ம்-இந்துஸ்தான்-ஆதிதாளம்.

பாட்டன்பிரம்மன்வாட்டமில்லா தோட்டமாய்பஞ்சாங்கம்
நாட்டமுடனீட்டமாயோட்டுறுனு இங்கு

(சூர-வ-ம்'. மந்திரி எனது பாட்டனாகிய பிரமன் குமாரர்களுடன் நித்தியம் பிராதகாலத்தில்வந்து பஞ்சாங்கமாகிய திதிவார நட்சத்திர யோககரணசாரங்களை சொல்லிப்போகின்றனு மந்திரி.

## மந்திரி துன்முகன் தரு.

இ-ம். இந்துஸ்தான்-ஆதிதாளம்.

ஈங்குபின்வாங்காமல் ஒங்கியுன்பாட்டன்
தீங்கில்பஞ்சாங்கம் நல்பாங்காயோதுறுரே

(மந்-துன்முகன் வ-ம்.) அரசே உமது பாட்டனாகிய பிரமன் நடுநடுங்கி ஓடிவந்து பிராதகாலத்தில் குறித்த திதிவார நட்சத்திர யோக கரணங்களை பயபக்திவிஸ்வாசத்துடனுரைத்துப் போகின்றூர் அரசே.

## சூரபத்மன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஆதிதாளம்.

சூரியன்கிரணங்கள் சீருமல்வேருய்
நேராயில்லாதோரமாய்க் கோரிப்போகுருஞ

(சூர-வ-ம்.) மந்திரி அதிகவெப்பத்தைத்தரும்சூரியனுனவன் நமது பட்டணத்தின் மேலாகப்போகாமல் கிழக்குமேற்கு கோபுரவாயல்களின் பக்கமாக குவிர்ந்தகிரணங்களை வீசிப்போகின்ருருமந்திரி.

## மந்திரிவக்ரபாலன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஆதிதாளம்.

போரான்கோபுரவாயல் நேராய்வெகுதீரர
சூராஅதிவீரா கண்பாரா நன்மாரா

(மந்-வக்கிரபாலன் வ-ம்). மஹாநுபாவா உங்களுடைய ஆக்கிஞசக்கரங்களுடைய மகிமைகளைத்தெரிந்த சூரியன் தன்னுடைய வெப்பாகிய கிரணங்களையொடுக்கி கிழக்குமேற்கு கோபுரவாயல்களின் வழியாகத்தானே குளிர்ந்து செல்கின்ருன் மஹாநுபாவா.

## சூரபத்மன் தரு.

இ-ம்-இந்துந்தான்-ஆதிதாளம்.

சந்திரனும்சுந்தரமாய் நொந்துஒளியாமல்
விந்தையுடனிந்த எல்லைவந்துபோகுருஞ

(சூர-வ-ம்.) மந்திரி மோகாந்தகாரத்தை மூட்டும் சந்திரனவன் வளர்வதும் குறைவதும் மறைவது மில்லாமல் எக்காலத்திலும் சூரியனைப்போலவே சோடசகலைகளோடு நமது நாட்டில் துலங்கிக்கொண்டு வருகின்ருஞ மந்திரி.

## மந்திரி மயிடன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஆதிதாளம்.

சந்திரனும்சுந்தரமாய் நொந்துஒளியாமல்
விந்தையுடனிந்தஎல்லை வந்துபோகுருனே.

(மந்-மயிடன் வ-ம்.) சுவாமி எக்காலத்திலும் உங்கள்மனதிற்குக் குறைவில்லாமல் அதிக சந்தோஷத்தை யடையும்படி சந்திரனுனவன் சோடசகலை யுடன் நமது நாட்டில் பூரணமாக நிறைந்திருக்கின்ருன் சுவாமி.

(சூர-வ-ம்.) மந்திரி எமதர்மனனவன் இவ்வுலகங்களி லிரா நின்ற ஜீவராசிகளைக் கொல்வதுபோல நமது சேனையானை குதிரைகள் முதலானவைகளைக் கொல்லக்கனவிலும் நினையாமல் பய பக்தியோடு அவைகளை குறைவில்லாமல் பாதுகாத்து வருகின்றனு மந்திரி.

(மந்திரி-தீயன் வ-ம்.) ஆண்டவா உங்களுடைய வீரமும் தீரமும் கண்ட எமதர்ம்மன் பயப்பிராந்திகொண்டு காலனுக்குக் காலனுயிருக்கப்பட்ட நீங்கள் யாதுவருத்தம் நேரிடச்செய்துவிடுவீர்களோவென்று தன்பாசத்தையும் சூலம் கட்டாரிமுதலிய ஆயுதங்களைத்தாங்காமல் நமது நாட்டில்வந்து சேனையானை பரிவாரங்களைஎல்லாம் குறைவில்லாமல் பாதுகாத்து வருகின்றான் ஆண்டவா.

(சூர-வ-ம்.) மந்திரி கனலைமிகுத்துக் கொளுத்தும் அக்னியானவன் நமது நாட்டிலிருப்பவர் யாவர் நினைந்தபோதிலும் தட்சணம் அவர்கள் இடத்தில்போய் இட்ட ஏவல்களைச்செய்து செங்கமலத்தைப்போல குளிர்ந்து காட்டி வருகின்றனு மந்திரி.

(மந்திரி-துர்க்குணன் வ-ம்.) இராஜாதிராஜ பரமேஸ்வரா உங்கள் செல்வத்தையும் மற்றுமுள்ள சம்பத்துகளையும் பார்த்த அக்னியானவன் அறிவழிந்து புலனெடுங்கி தத்தளித்துக்கொண்டு தனது வெப்பம்யாவும் அடக்கி செங்கமலத்தைப்போலக் குளிர்ந்துகாட்டி அவரவர்கள் இடும் வேலைகளைக் கிரமமாகச் செய்து கொண்டு வருகின்றான் ராஜாதிராஜ பரமேஸ்வரா.

(சூர-வ-ம்.) மந்திரி எங்கும் சஞ்சரிக்கும் வாயுவானவன் நமது நகரங்களின் தெருக்களில் வீசிய வஸ்திராபரணங்கள் புஷ்ப்பமாலைகள் கலவைச்சாந்து சுண்ணப்பொடி மகரந்தமுதலான குப்பைகளை இராப்பகலின்றி சுத்திசெய்து வருகின்றனு மந்திரி.

(மந்திரி-தீயன் வ-ம்.) பிரபு மகம்மேருவினது சிகரங்கள் ஆயிரத்துள் ஒருமூன்றை தன்வேகத்தினல் சமுத்திர மத்தியில் எறிந்தவாயுவானவன் உங்கள்பேரைக் கேட்டமாத்திரத்தில் மனமொடுங்கி வாய்புதைத்து கைகட்டி அதிக ஜாக்கிரதையாய் நமது நகரங்களின் தெருக்களில் வீசிய வஸ்திராபரணங்கள் புஷ்பமாலைகள் கலவைச்சாந்து சுண்ணப்பொடி மகரந்தமுதலான குப்பைகளை இராப்பகலின்றி சுத்திசெய்து வருகின்றான் பிரபு.

(சூர-வ-ம்.) மந்திரி சமுத்திரராஜனுகிய வருணன் புனுகு, ஜவ்வாது, அகிற்சந்தனத் தெய்வகளப கஸ்தூரிபாலின் மணமுதலான பரிமளங்களை திவ்ய சுகந்தங்கமழும் பன்னீர்கூட்டி இப்பதி எல்லைமுற்றிலும் சிறுதுளிகளாக இறைத்துத்துகளெழாமற் செய்துவருகின்றுனு மந்திரி.

(மந்திரி-துன்முகன் வ-ம். மன்னவா உலகங்களுக்குச் செழிப்பைத்தரும் வருணன் பயந்தொடுங்கி துர்க்கந்தத்தை விலக்கும் நற்கந்தங்களை இறைத்துவருகின்றுன் மன்னவா.

(சூர-வ-ம்.) மந்திரி பொன்னுலகத்தில் வசிக்கும்இந்திரனும் சொர்க்கலோகத்திலிருக்கும் விண்ணவர்களும் அட்டதிக்குப்பாலகர் ரிஷிகளுடன்வந்து நமது அரண்மனைமுதலான யிடங்களில் வேண்டும் பணிவிடைகளில் யாதுங் குறைவில்லாமல் செய்துவருகின்றுர்களா மந்திரி.

(மந்திரி-எரிக்கண்ணன் வ-ம்.) அரசே இந்திரன் முதலானவர்கள் யாவரும் நமது அரண்மனையில் வேண்டும் வேலைகளை அடங்கிசெய்துக்கொண்டு வருகின்றுர்கள் அரசே.

(சூர-வ-ம்) மந்திரி என்னுட்டில் நடக்கும் இப்பேர்ப்பட்ட வைபவத்தைப்போலவே எனது தம்பிமார்களாகிய சிங்கமுகாசுரனுக்கும் தாருகாசுரனுக்கும் நடத்திவருகின்றுர்களா மந்திரி.

(மந்திரி-துர்த்தீயன்-வ-ம்.) பிரபு இங்குநடத்தி வருவதைப் போலவே அங்கும் நடத்திவருகின்றுர்கள் பிரபு.

(சூர-வ-ம்.) மந்திரி நமது நாட்டின்கண்ணிருக்கும் ஆலயங்களில் திரிகாலபூஜை நடந்தேறுவதுடன் மாதமும்மாரி பெய்துகொண்டு வருகின்றதா மந்திரி.

(மந்திரி-தீக்கண்ணன் வ-ம்.) மஹாராஜனே நமது நாட்டிலிருக்கும் ஆலயங்களில் திரிகாலபூஜை நடந்தேறுவதுடன் மாதமும்மாரி பெய்துகொண்டு வருகின்றன மஹாராஜனே.

## சூரபத்மன் விருத்தம்.

பொன்னகர்க்கிறைவனை புரந்தரன்தன்னைமந்திரி
என்னரசின்முன்பாக ஏகிடச்செய்குவாயே.

(சூர-வ-ம்.) மந்திரி இந்திரனை என்னரசின்சமுகம் வரச்செய்வாய் மந்திரி.

(மந்திரி-வ-ம்.) இராஜபரமேஸ்வரா இதோ வரவழைக்கின்றேன் இராஜ பரமேஸ்வரா.

(மந்திரி-வ-ம்.) ஏ இந்திரா உன்னை ராஜன் கொலுவிற்கு வரச்சொன்னார் சீக்கிரம் செல்வாய் இந்திரா.

(இந்திரன்-வ-ம்.) இதோ செல்கின்றேன் மந்திரி யாரே.

## இந்திரன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஆதிதாளம்.

பல்லவி.

ஏதுதொழிலிடுவானோ பாவி எங்குதேயுள்ளமையோ. (ஏ)

சரணம்.

வாதுபுரிந்துவருந்திடச்செய்ய வரவழைத்திட்டானேவகையறியேன்
தீதைவிலக்காமல்தெய்வமே சதிசெய்ய தேடிஎழுதினையோ. (ஏ)
ஆதரவில்லாமலலையுதென்னெஞ்சமும் அருமைகுறைந்துஅவதிபட
சோதனைசெய்வதுசோதியே யுனக்கிதுசொல்லுமதியிலையோ. (ஏ)

## இந்திரன் விருத்தம்.

ஆயிரவருடகாலம் அந்தரந்தவமிருந்த
நேயனேஎனையழைத்த நேர்மையையுரைப்பாய்போற்றி.

(இந்திரன்-வ-ம்.) போற்றி போற்றி மஹாநுபாவா என்னை வரவழைத்த காரணம் யாதோ தெரிவிக்க வேண்டும் மஹாநுபாவா.

## சூரபத்மன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ரூபகதாளம்.

பல்லவி.

சொல்வதைக்கேளிந்திரனேநீ சோம்பலாகாதே. (சொல்)

அநுபல்லவி.

இலகுந்தானவருக்கு இன்புள்ளதம்பியா யிருப்பாயினிதானே. ()

சரணம்.

விரைவாய்வேலாவலையஞ் சென்றுவிரும்புமச்சங்கள்
பருத்திடுமகரம்பரிந்துபுசித்திட பற்றுதெனெண்ணங்கள்
ஆறுதாவல்தீராய்கொண்டேன் அறிவாய்நீயுமித்தினமே
கூறுதொன்றும்நேராய்என்முன் கொணர்வாய்நற்குணமே
கொணர்வாய்நற்குணமே கொணர்வாய்நற்குணமே. (சொல்)

(சூர-வ-ம்.) ஏ இந்திராநீ இதுவரையிலும் செலுத்திவரும் வேலைகளுடன் அலைகள்பெருத்த சமுத்திரத்தி லிராநின்ற மகர மச்சமுதலானவைகளில் நான்புசிப்பதற்கு யோக்கியமாகிய பருத் தமீன்களைப் பிடித்துக்கொண்டுவந்து கொடுக்க உன்கூட்டத்து டன் செல்வாய் இந்திரா.

## இந்திரன் விருத்தம்.

அண்ணலேவிரும்புமச்சம் அட்டியில்லாமலிப்போ
திண்ணமாய்க்கொண்டுவாரோம் தீவரமனுப்புவீரே.

(இந்திரன்-வ-ம்.) ஆண்டவா தாங்கள் புசிக்கும்படி கோரி னமச்சங்களை சமுத்திரங்கள் சென்று தடையில்லாமல் இப்பொ ழுதே பிடித்துவருகின்றோம் உத்திரவுதாரும் ஆண்டவா.

(சூர-வ-ம்.) சீக்கிரம்போய் கொண்டுவருவீர்கள் தேவர் களே.

## இந்திரன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஏகதாளம்.

பல்லவி.

என்னவிதியிட்டாய் முன்னோனேநான்
பொன்னுலகத்து மன்னனாய்ப்பிறந்து. (எ)

அநுபல்லவி.

சொன்னவேலைசெய்ய சோதிக்கிறாய்மனம்
இன்றெனக்கிந்த இழிவடைய. (எ)

சரணம்.

தீராப்பழிப்பாதகன் தீரமாயழைத்தெனை
சீராய்மனைப்பிடித்து வாராயென்றுசொல்ல
நேராய்க்கேட்க நேர்ந்ததே. (எ)

வானோர்யாவர்களும் வணங்கிஇருந்தோரும்
நானுமிவ்விதிப்பட நாள்வந்ததோ
மானிடமேந்தி மாற்றலரிதோ. (எ)

(இந்திரன்-வ-ம்.) ஓ ஜெகதீசா சூரபத்மன் வீட்டில் வேலை கள் செய்யவும் சமுத்திரங்கள்சென்று மீனைப்பிடிக்கவும் எங்களுக் குவிதித்தனையோ இறப்போமென்று எண்ணினாலும் பாழாப்

போன அமுதம் உண்டதினலல்லவோ மரணம்வரவில்லை இனி என்செய்வது கடலிடம்சென்று வருணனிடம் மச்சங்கள் தரும் படி கேட்கப்போகின்றேன் வேறுகதியில்லை நீயேகதி ஜெகதீசா.

## இந்திரன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஏகதாளம்.

பல்லவி.

ஓடிவாருமையாவருணரே ஒருதவிசெய்துகாக்கவா வா வா. (ஓ)

சரணம்.

தேடிவந்தேனிங்கு நாடியுந்தனிடம்
கோடிபுண்யமுண்டு கூறுறேனுனைக்கண்டு. (ஓ)

கருத்தசாகரத்தினில் காணுமலொளித்தாயோ
வருத்தமேதீர வஞ்சநெஞ்சம்விட்டு. (ஓ)

எந்தன்மனக்குறைகளை எப்படிமுடிப்பேனே
எதுவுந்தோணவில்லை ஏங்குதென்செய்வேன்ஒல்லை. (ஓ)

(இந்திரன்-வ-ம்) ஓ வருணராஜனே இதுசமயம் எனக்குத விசெய்ய ஓடிவரவேண்டும் வருணராஜனே.

## வருணன் விருத்தம்.

இந்திரபூபாநீயும் எந்தனைப்பொருட்டாஎண்ணி
சிந்தைநொந்தழைந்தசேதி சீக்கிரமுறைசெய்வாயே.

(வருணன்-வ-ம்.) தேவராஜனே அதிக மனவாட்டத்துடன் என்னை அழைத்தசேதியை தெரிவிக்கவேண்டும் தேவராஜனே.

(இந்திரன்-வ-ம்.) அப்பா வருண எனக்கு நேர்ந்த காலகதியை என்னவென்றுரைப்பேன் பாபியாகிய சூரபத்மன் கொஞ்சமும் அஞ்சாமல் சமுத்திரங்கள் சென்று தான் புசிக்கும்படியான பெரியமகரமச்சங்களைப் பிடித்துணக்கிக் கொண்டு வரும்படி கட்டளையிட ஓடிவந்தேன் இக்காலத்தில் எந்தன் மனக்குறைமுடியத் தக்கதாக அலையாகிய கைகளினல் திமிங்கலமுதலாகிய மீனினங்களை வெளியிடுவையாகில் நான் பட்டலையும் துக்கசாகரத்தின் கரையிலேற்றியதாக நினைத்துக் களிப்பேன் வருண.

(வருணன்-வ-ம்.) ஆயிரங்கண்ணு உமக்கும் இப்படி இரங்கும்படியான காலமும் நேர்ந்ததல்லவா என்மனம் ஒருவாறு துயரமாகின்றது இருந்தபோதிலும் உமது இஷ்டப்படி இதோ யான் சமுத்திரஞ்சென்று சேருடி பருத்தமீன்களை வாரிவாரி விசாலமாகிய கரையின்கண்மலைகளைப்போலக் குவித்து விடுகின்றேன் எடுத்துச்சண்டாளனாகிய சூரனுக்களிப்பீர் ஆயிரங்கண்ணு.

(இந்திரன்-வ-ம்.) தேவர்களே நமக்கெனவிதித்த விதியின்படிமுடியுமல்லாமல் வேறொன்றும் முடியாது இப்போது வருணன் சமுத்திரக்கரையில் கொண்டுவந்து சேர்த்திருக்கும் மச்சங்களைக்கூசாமல் எடுத்துலர்த்தி அனந்தன் வாசுகி தட்சன்முதலிய சர்ப்பங்களால் கட்டிஎடுத்துக்கொள்ளுங்கள் செல்வோம் தேவர்களே.

## தேவர்கள் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஏகதாளம்.

பல்லவி.

அய்யய்யோ இதற்கென்ன செய்குவோம்நாமே. (அ)

அநுபல்லவி.

அரசன்சொற்படிக்கிப்போ தனைத்தையுமுணக்கிட. (அ)

சரணம்.

சீலமேயொழிந்திட காலமோயிது
கோலமென்னசெய்தோமோ குவலயத்தில் (அ)

மானமாயிருந்தநாம் மதிமயங்கிஇப்போ
ஈனத்தொழில்புரிய இட்டானேசிவன். (அ)

(ஏமன்-வ-ம்.) தேவர்களே சூரனென்னும் பாதகனால் இதற்குமுன்னமே மகத்தாகியதுக்கசாகரத்திலழுந்தி மனவூக்கமும்வலியுமிழந்து வருந்தியயாம் எப்புவனங்களினும் வெறுக்கும் பழிபாதகத்திற் கேதுவாகிய இவ்வீனத் தொழிலையும் செய்யத்துணிந்தோம் இன்னும் ஏதேதுகொடிய கிருத்தியங்களை நடத்திவைக்க இருக்கின்றானோ ஜெகதீசன் இப்படியும் விதிப்பானென்று தெரியாமல் போனதே மானிடரும் சாத்திரமுன்னிலையில் மகாபாதகமென்றிகழ்ந்து நீக்கிஇருக்க நாம்செய்யநேர்ந்ததே என்செய்வது தாமதம் செய்யாமல் சீக்கிரம் கட்டிஎடுத்துக் கொள்ளுங்கள் செல்வோம் தேவர்களே.

## தேவர்கள் கண்ணி.

இ-ம்-நீலாம்புரி- திரிபுடைதாளம்.

என்னகாலமெங்களுக்கு எய்திட்டதுன்மனம்கல்லோ
அன்னைக்குமன்னையான ஆதியே
செங்கோலிழந்திந்திரனும் சிறுமைப்படகாலமாச்சே
மங்கைபாகத்தமர்ந்தோனே மகிழ்ந்தாயோ
பாவிசூரனிடும்வேலை பரிந்துசெய்யப்பார்த்தாயே
ஆவிதடுமாறியய்யோ அலையலாச்சே
மச்சங்கள்பிடித்துணக்கி இச்சையுடனேந்தத்தலை
மெச்சினையோகைலைவாசா லச்சைபட
வானவர்களென்றுநாங்கள் வகித்திருந்தகாலம்போச்சே
ஈனமானதொழிலாலே ஈசனே.

(தேவர்கள்-வ-ம்.) ஓ லோகநாயகா உன்னால் கிருமித்தவே தவொழுக்கங்களுக்கும் சிறந்தோங்கிய ஞானவரம்பிற்கும் விலக்காகிய கொடிய பாதகத்தொழிலை செய்யவும் உலகத்தவர் வானவர்களென மதித்திருந்த மதிப்பையுங் குறைக்க களித்தாயோ கைலைவாசா.

## தேவர்கள் விருத்தம்.

காலினலிட்டவேலை கையினல்செய்யஓடி
சீலனேசாகரத்தின் சினையுள்ளமச்சமெல்லாம்
சாலவேபிடித்துணக்கிச் சடுதியில்வந்ததாலே
ஆலைபோலாடியோய்ந்தோம் அன்புடனேற்றுக்கொள்ளே.

(தேவர்கள்-வ-ம்.) இராஜாதிராஜகெம்பீரா நீர்காலின லிட்டவேலைகளை கைகளினல் சமுத்திரத்தி லிருக்கும் பருத்தமச்சங்களைப்பிடித்து உலர்த்தி புலன்களோய எடுத்துவந்தோம் ஏற்றுக்கொள்வீர் இராஜாதி ராஜகெம்பீரா.

(சூர-வ-ம்.) ஆ ! ஆ ! நமக்கிஷ்டமான மச்சங்களைப்பிடித்து உலர்த்திக்கொண்டு வந்தார்க ளல்லவா மகாசந்தோஷம்.

## சூரபத்மன் விருத்தம்.

தேவர்காள்தினமும்சென்று திரண்டதோர்மச்சமெல்லாம்
ஆவலாய்க்கொணருவீர்கள் அட்டியில்லாமற்றுனே.

(சூர-வ-ம்.) தேவர்காள் தினம்தினம் இவ்வண்ண மாகவே அஞ்சப்படுமீன்களை பிடித்துவருவதுடன் அரண்மனை வேலைகளை ஜாக்கிரதையாக செய்து வருவீர்கள் தேவர்களே.

(தேவர்கள்-வ-ம்.) பிரபு தங்களுத்திரவுபடி அப்படியேசெய்துவருகின்றோம் அரண்மனைக்குச் செல்கின்றோம் பிரபு.

(பொது-வ-ம்.) கேளுங்கள் கனவான்களே சூரபத்மன் இவ்வாறு அரசுசெய்யுங்கால் பதுமகோமளைஎன்னும் பட்டபுதேவியின் வயற்றில் உதித்தகுமாரன் பானுகோபனென்பவன் மாணிக்கக்கட்டிலில் நித்திரை செய்திருக்கும் தருணம் சூரியன் பிரகாசத்தினுலுண்டாகும் கிரணயானது சன்னலின்மூலமாகப் பாய்ந்து தன்மீது தாக்கக்கண்ட பானுகோபன் சூரியனைப்பிடித்துத் தன் தொட்டிலில்கட்டி நித்திரைசெய்தலைக் காண்பீர்கள் கனவான்களே.

(பானுகோபன்-வ-ம்.) ஆ! ஆ! என்ன ஆச்சரியம் நாம் ஆயிரத்தெட்டண்டத்திற் கதிபதியாகிய சூரனுடைய புத்திரனென்று கொஞ்சமும் பாராமல் சூரியனனவன் தன்னுடைய ஆயிரம் கிரணங்களைக்கொண்டு அதிகதுரிதமாய் நாம் படுத்திருக்கும் தொட்டிலில் சன்னலின்மூலமாய் நுழைந்து நம்மைவருத்தும்படியாய் காய்ந்தானல்லவா அவனை இப்பொழுதே பிடித்துவந்து தொட்டிலின் காலில் கட்டிவிடுவோம் என்செய்கின்றான் பார்ப்போம் இதே நல்லயோசனை.

## பானுகோபன் கண்ணிகள்.

இ-ம்-புன்னுகவராளி-ஏகதாளம்.

சூரியனேயுன்னுயிரகிரணம் வீறிடகாய்ந்தென்மீதில்பட
ஆருனக்கிந்தஆண்மைகள்தந்தார் அறிகிறேனுந்தன்கெர்வம்
எனக்குவிகராய்எதிர்த்திடும்பகைசெய்ய உனக்குவந்ததேனேசொல்வாய்
சினமதெழும்பிசீறுதேயுன்பேல் செங்கதிரோனேமனமே
உதட்டமாகவேவுனதுகோரமதால் பதட்டமாகவேபாராமல்நீ
சிதைத்திடும்படிசினத்துவந்த திராணியையறிகிறேன்பாராய்

(பானுகோபன்-வ-ம்.) அடாபருதி கொஞ்சமேனும் என்னுடைய சவுரியமரியாமல் உன்னுடைய கிரணங்களால் நித்திரையிலிருந்த என்னை எழுந்திருக்கச்செய்ததினுல் இதோ எனது தொட்டிலின்காலில் கட்டினேன் பாரடா பருதி.

(பிரமன்-வ-ம்.) தேவராஜனே இதென்ன ஆச்சர்யம் பார்த்தனையா சூரபத்மன் குமாரன் குழந்தைப்பருவற்றிற்றுனே இவ்வலியினைச் செய்வானுயின் காளைப்பருவத்தில் நாமெல்லோரும் என்னபாடு படவேண்டுமோ தெரியவில்லையே அவன் சூரியனைக் கட்டினதினுலே ஜெகமெங்கும் இருள்சூழ்ந்திருப்பதைப் பார்த்தனையா இதைராஜனுக்குத் தெரிவித்து மீட்டுவிடுவோம் வருவாய் தேவராஜனே.

(இ-ன்-வ-ம்.) அப்படியே செல்வோம் வாரும் பிரம்மதேவரே.

## பிரமன் விருத்தம்.

சோராமலரசிபற்றும் சூரனேசொல்லக்கேளாய்
பாராமனுமதுபுத்திரன் பானுவைப்பிடித்துத்தொட்டில்
சீராருங்காலில்கட்ட ஜெகமெலாம்பதைக்குதய்யா
வீராமல்விடுவித்தெங்கள் வினையதையகற்றுவாயே.

(பி-ன்-வ-ம்.) இராஜகெம்பீரா உமது திருக்குமாரன் சூரியனைப் பிடித்து தொட்டிலின் காலில் கட்டினதால் ஜெகமெலாமிருள்சூழ்ந்து ஜெந்துக்களெல்லா மலைகின்றது அன்றியும் எங்களுடைய நித்தியகருமங்களை முடிக்கவருந்துகின்றோம் சூரியனை விடுவித்து எங்களைக்காக்கவேண்டும் இராஜகெம்பீரா.

## சூரபத்மன் விருத்தம்.

காலையில்வந்துபஞ்சாங் கத்தினையோதும்பாட்டா
சாலவேஎனதுபுத்திரன் தரணிக்கென்குறைகள்செய்தான்
சீலமார்அவன்தான்யாது செய்தனன்எந்தன்மைந்தர்
கேலவேயுணர்ந்திலேன்யான்எடுத்திப்போதுரைசெய்வாயே.

(சூ-ன்-வ-ம்.) ஏ பாட்டா எனது குமாரன் சூரியனைப்பிடித்துக் கட்டினவிஷயம் அரியமாட்டேன் அப்படிக்கவன் நடத்தத்தக்க குறைப்பாடேதேனு முண்டானல் தெரிவிப்பாய் பாட்டா.

(பி-ன்-வ-ம்.) பிரபு தேவரீர் குமாரன் நித்திரைசெய்யு முன்னிலையில் சூரியனுடைய கிரணகாந்தியானது முகத்திற்றுக்கிய நிமித்தியமாகப் பிடித்து சிறையிலிட்டார் பிரபு.

(சூ-ன்-வ-ம்.) பாட்டா அதற்குயான் செய்யவேண்டுவ தொன்றுமில்லை நீங்களனைவரும்போய் எனதுபுத்திரனுக்கு இதம்பெற நன்மொழிகளாற் புகழ்ந்து அவன் சம்மதிபெற்று சூரியனை விடுவிக்கக் கடவாய் பாட்டா.

(பி-ம் வ-ம்.) அப்படியே செய்கின்றோம் அரசே போய்வருகின்றோம்.

(பொ-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே பிரம்மன் முதலியோர் அரம்பைமேனகை திலோர்தமையுடன் தொட்டிலில் நித்திரைசெய்யும் ராஜகுமாரனிடம் சென்று தாலாட்டி ஆசீர்வாதம் சொல்லி உபசரிக்க குழந்தைஎழுந்து சம்பாஷிக்கும்விதம் காண்பீர்கள் கனவான்களே.

(பி-ன்-வ-ம்.) பெண்ணே மேனகாதிலோத்தமா அரம்பா நீங்கள் பாலனுக்குதிவ்யமான ஆடல்பாடல்கள்செய்து தாலாட்டினுல் சூரன்குமாரன் நித்திரையிலிருந்து எழுந்திருப்பான் நமது கோரிக்கையை முடித்துக்கொள்ளலாம் பெண்களே.

(அரம்பாஸ்ரீகள்-வ-ம்.) அப்படியே இதோ ஆடிப்பாடி நடிக்கின்றோம் பிரமதேவரே.

## அரம்பாஸ்ரீகள் தரு.

இ-ம்-சஹாணு-ஏகதாளம்.

பல்லவி.

ஏனிந்தநித்திரைகொண் டிருக்கிறாய்நீபாலா
எழுந்திரடா என்சீலா. (ஏ)

அநுபல்லவி.

மானிலமெல்லாமயங்கி இருள்சூழ்ந்து
மதிகுலைந்தழுகிறார் மகதேவர்களுமாழ்ந்து. (ஏ)

சரணம்.

சூரியனைக்கட்டி சோதிக்கிறாயின்னும்
சுந்தரமுள்ளஎன் சொகுசுள்ளநல்லணியே
சோருதேபிராணிகள் சூழ்கடல்மண்மேலே
துதிக்கிறோமுன்னையே துலங்குங்கண்மணியே. (ஏ)
ஜாலம்செய்வதுனக்கு சரியல்லாடாகண்ணே
சங்கடமடைகிறோம் சமயமிதுவேகாரடா
வேலைசூழுலகெல்லாம் வெறுப்பதுனக்கழகா
வேண்டுறார்யாவரும் விழித்துநீபாரடா. (ஏ)

## தாலாட்டல் தரு.

இ-ம்.-ஆநந்தபைரவி.

ஆராரோ ஆராரோ அய்யனுக்கு ஆராரோ ஆராரோ
சீரானஎங்கள்தவ பெற்றரசே எழுந்திருப்பீர்

அன்னைதந்தையாவருமே அன்புமிகக்களித்தோங்க
என்னகருக்கிறையாக ஏற்றவாளழுந்திருப்பீர்.
உண்டஅன்னசாரத்தால் உறங்கிருக்குமன்னவரே
தெண்டனிட்டோமுந்தனுக்கு தெளிந்துநீரெழுந்திருப்பீர்
பார்தனிலேயெல்லோரும் பதைத்துருகிநைந்தழுக
சூரியனைக்கட்டிவைத்த சுந்தரனேஎழுந்திருப்பீர்
ஆயிரத்தெட்டண்டம் ஆண்டிடஅவதரித்த
சேயனேகருணைவைத்து சீக்கிரமேஎழுந்திருப்பீர்

## பானுகோபன் விருத்தம்.

மண்பொதுத்தந்தையேநீர் மனவாட்டமிகவேகொண்டு
புண்பட்டிங்கோடிவந்த புதுமையையறிவிப்பீரே,

(பா-ன்-வ-ம்.) பிரமதேவரே நீரதிகமனவாட்டத்துட னிங்குவந்தகாரணம் யாதுதெரிவிப்பீர் பிரமதேவரே.

## பிரமன் விருத்தம்.

சூரியன்கதியில்லாமல் சோர்ந்திடப்பிராணிஎல்லாம்
சோரியுன்னிடமேவந்தேன் கொப்பெனமீழ்க்கத்தானே.

(பி-ன்-வ-ம்.) அப்பாபேரா நீசூரியனைக் கட்டினமகிமையால் ஒளிகுறைந்து உலகத்திலுள்ள பிராணிஎல்லாம் சோர்ந்தழிகின்றது சீக்கிரம் மீட்கவந்தேன் பேரா.

(பா-ன்-வ-ம்.) பாட்டனாரே சூரியன்வேண்டுமாயின் உமது படைக்கலத்தைத் தந்தால்விடுவேன் மறுத்தால் விடமாட்டேன் போம் போம் பாட்டனாரே.

(பி-ன்-வ-ம்.) அப்பாபேரா இதோமந்திரபூர்வமாக வுனக்கு என்னுடையமோகனாஸ்திரத்தையும் பிரம்மசரத்தினையும் தந்தேன் ஏற்றுக்கொண்டு பிரகாசம் பொருந்திய சூரியனை விட்டுவிடுவாய் பேரா.

(பா-ன்-வ-ம்.) தேவர்களே இதோ சூரியனைவிட்டுவிட்டேன் உங்களிருப்பிடம் செல்வீர்கள் தேவர்களே.

(இராக்ஷதர்கள்-வ-ம்.) இராஜாதிராஜபரமேஸ்வரா உங்கள் குமாரன் சூரியனைவிட்டுவிட பிரமாவினிடத்திலிருந்த மோகனாஸ்திரம் பிர்ம்மாஸ்திரம் இவைகளைப் பெற்றுக்கொண்டு விட்டு விட்டார் இராஜாதிராஜ பரமேஸ்வரா.

(சூ-ன்-வ-ம்) ஆ-ஆ-சந்தோஷித்தேன் வீரர்களே மந்திரி மார்களே இன்றுமுதல் எனது புத்திரனுக்கு பானுகோபன் என்னும் திருநாமத்தை விளக்கிவரவேண்டும் வீரர்களே மந்திரிமார்களே.

(ம-ள்-வ-ம்) அப்படியே விளங்கும்படி செய்கின்றோம் ஆண்டவா.

## சூரபத்மன் விருத்தம்.

சேனதிபதியேநீயும் சிறந்ததோர்படையும்சென்று
வானோர்க்குப்பதியாய்வாழும் வச்சிரபாணிதன்னை
நானடியழைத்ததாக நயந்துநீவிரைவில்இன்றே
போனதுதெரியாவண்ணம் போய்ப்புகன்றடைகுவாயே.

(சூ-ன்-வ-ம்.) சேனதிபதியே யுன்சயின்யங்களுடன் பொன்னுலகம்சென்று இந்திரனைக் கைப்பிடியாகப் பிடித்து வருவாய் சேனதிபதியே.

## சேனதிபதி விருத்தம்.

ஒப்பிநீருரைத்தவாறே ஒருநொடிதனிலேயேகி
கைப்பிடியாகப்பற்றிக் கடிதினில்வருகுவேனே

(சேனதிபதி-வ-ம்.) மகாநுபாவா நீர் ஆக்யாபித்த வண்ணமே இந்திரனைக் கைப்பிடியாகப் பிடித்துவர செல்கின்றேன் மகாநுபாவா.

## சூரபத்மன் விருத்தம்.

அரியநற்காவல்காக்கும் அதிரூபவதிகளேயான்
விரிகடல்போலமய்யல் மிகவடைந்துழல்தலாலே
புரிமகபதியினெல்லை புகுந்திந்திராணிதன்னை
ஒருநிமடத்திற்கொண்டிங் கோடியேவருகுவீரே.

(சூ-ன்-வ-ம்.) அரண்மனை அந்தபுரம் காவல்கார்க்கும் ஒன்பதுகோடி பெண்சேனைகளே யான் அனேகரூபமுள்ள ஸ்ரீகளைப் புணர்ந்தும் இப்பொழுது இந்திராணியின்பேரில் காதலாயிருப்பதால் அவளைசீர்கிரமாய்க் கொண்டுவருவீர்கள் காவற்பெண்களே.

## காவற்பெண்கள் விருத்தம்.

பொன்னுலகத்தைச்சேர்ந்து புகழுமிந்திராணிதன்னை
மன்னரேஅழைத்தேயோடி மகிழ்ந்திடவருகின்றோமே.

(காவற்பெண்கள்-வ-ம்.) மகாராஜனே நீங்கள் மனமகிழ இதோ அந்த இந்திராணியைப் பிடித்துவர போய்வருகின்றோம் மகாராஜனே.

## இந்திரன்கொலு போற்றிவிருத்தம்.

முன்னைநான்மறைகள்காணு முதல்வனேபோற்றிபோற்றி
தன்னையேயுணர்ந்தோருள்ளும் தலைவனேபோற்றிபோற்றி
மின்னைநேரிடையாள்பாக விமலனேபோற்றிபோற்றி
என்னையேநாளும்ஆளும் இறைவனேபோற்றிபோற்றி.

(ம-ரி-வ-ம்.) போற்றி போற்றி இந்திரபூபா போற்றி.

(இ-ன்-வ-ம்.) வாழி வாழி சதாவாழி மந்திரி.

(தேவதூதர்-வ-ம்.) போற்றி போற்றி தேவராஜனேபோற்றி சூரபத்மன் சயின்யங்களில் பலராக்ஷதவீரரும ஜெயசாலிகளாகிய திரண்டபெண்படைகளும் சர்வாயுதபாணிகளாய் சண்டைக்காயுத்தப்பட்டவர்போல ஆர்பரித்து இதோவான நாட்டைநோக்கி வந்துவிட்டார்கள் தேவராஜனே.

(இ-ன்-வ-ம்) அப்பாதேவதூதர்களே அதற்கு தகுந்த முயற்சிசெய்துக்கொள்ளுகிறேன் அஞ்சவேண்டாம் தூதர்களே.

(இ-ன்-வ-ம்.) கண்மணி சூரபத்மனுடைய சயின்யங்கள் ஏதோ கெட்டஎண்ணங்கொண்டு இங்குவருகிறார்கள் நாம் குயிலுருக்கொண்டு பூலோகம் செல்வோம் வருவாய் கண்மணி.

(இந்திராணி-வ-ம்) தடையில்லாமல் செல்வோம் வாரும் நாயகர்.

(இ-ன்-வ-ம்.) பெண்மணி இந்தசீகாழித்தலமே நாமிருக்க நல்லவாசமான ஸ்தலமாயிருக்கிறது இவடம் பூந்தோட்டமமைத்து சிவனைப்பூஜைசெய்துக் கொண்டிருப்போம் பெண்மணி.

(இந்திராணி-வ-ம்.) நாயகா இதேநல்லயிடமாயிருப்பதால் இவ்விடமேதங்கி பூந்தோட்டமமைத்து சிவனைப் பூஜைசெய்துக் கொண்டிருக்கலாம் நாயகா.

## இராக்ஷதவீரர்கள் காவற்பெண்கள் தரு.

இ-ம்-நாதநாமக்கிரியை-ஏகதாளம்.

பல்லவி.

தேடிப்பிடிப்போம்வாரீர் தேரியவம்சனைதிகழ்பெருமிந்திரனை. தே

அநுபல்லவி.

ஆடிப்பரந்து நல்லரண்மனேகளைசுற்றி
நாடிஎந்தயிடமும் நலமேமிகயியற்றி. (தே)

சரணம்.

பொன்னுலகெங்கும் புதுமைவீதியோங்கினும்
மின்னல்போலோடியே மேவாதளங்கினும். (தே)

(இராக்ஷதவீரர்கள்-ஸ்ரீகள்-வ-ம்.) அடா அண்ணமார்களே இந்தபொன்னுலகெங்கும் சுற்றியும் இந்திரனையும் அவன்தேவியையும் காணவில்லையே அரசன் நம்மையொருகாரியக்காரராக நிதானித்து அனுப்பியபணிவிடையை முடிக்க வகையற்றோமே இந்திராணியுடன் தேவராஜன் இவடம்விட்டு நீங்கினதாகக் காணுகின்றது என்செய்கிறது அண்ணமார்களே.

## இராக்ஷதர்கள் கண்ணி.

இ-ம்-புன்னகவராளி-ஆதிதாளம்.

அங்கும்இங்கும்தேடி எங்கும்காணாததால் அயருதேயுள்ளமய்யா
பங்கமேதுவருமோ பராளுமன்னனால் பனிமதிசூடுமெய்யா
பொன்னகரெங்குமேபோய்பார்த்துதேடியும் புரந்தரனைக்காணோமே
என்னசெய்யப்போறோம்எங்கள்மனதிற்கு ஏதுவும்தோணாதானோமே
வானுடர்செய்திட்ட வஞ்சகமோயிது வழியேதுந் தோணவில்லை
சேனாபதிகளொடு சேர்ந்தசேனையுமாய்சோர்ந்தோமீதென்னதொல்லை.

(இராக்ஷதர்கள்-வ-ம்.) அடாவீரர்களே இதெல்லாம் இங்கிருக்கும் தேவர்களால் தான் இந்தசூதுநடந்திருக்கிறது இவர்களை பற்களுதிர்த்து கிட்டிமாட்டி அண்ணாந்தாள்போட்டு கேட்டால் தான் தெரியும் இல்லாவிடில் ஒன்றுந்தெரியாது அப்படியே செய்யுங்களடா வீரர்களே.

## இராக்ஷதவீரர்கள் தரு.

இ-ம்-நாதனமக்கிரியை-ரூபகதாளம்.

பல்லவி.

பண்ணவர்களைப்பாபம் எண்ணாமலேதேகம்
குண்ணும்படிநீங்கள் பண்ணுங்கள். (ப)

அநுபல்லவி.

விண்முழுதுமாளி கண்ணில்காணாமலே
உண்மையாய்ப்போனிடம் திண்ணமாய்சொல்லென்று. (ப)

சரணம்.

கெட்டித்தனங்காட்டி நெட்டியுயிர்வாட்டி
மட்டிகைகளிலே கிட்டிதனைமாட்டி
சட்டைசெய்யாமலே திட்டென்றிருந்தாலே
துட்டர்பற்களுதிர சட்டமாய்க்குத்துங்கள். (ப)

எத்திசைபோனாலும் குத்திப்பிடித்துவந்
தேத்தியண்ணுந்தாளை சுத்துங்கள்
சித்தங்கலங்கியே ஒத்துசொல்லளவும்
கத்தியழுதிட மெத்தப்பதறிட. (ப)

(இராக்ஷதர்கள்-வ-ம்.) அடாதேவர்களே இந்திரனும் அவன் மனைவியும் எங்கேபோயிருக்கிறார்கள் சொல்லுமளவும் உங்களை விடமாட்டோம் இன்னும் செய்யாத சித்திரவதைகளெல்லாம் செய்வோம் சீக்கிரம் சொல்வீர்களடா தேவர்களே.

## தேவர்கள் விருத்தம்.

சுறுக்குடன்விடவேவந்த சூரரேசொல்லக்கேளீர்
மறுத்தலில்மகவான்சென்று மறைந்திடமறியோமின்று
நறுக்கிநீர்பிழிந்திட்டாலும் நாங்களென்சொல்லப்போறோம்
பொறுத்துரக்ஷிக்கவேண்டும் பொன்னடிபோற்றிபோற்றி.

(தேவ-வ-ம்.) ஐயாராக்ஷதவீரர்களே இந்திரன் தன்மனைவியோடுபோனவிடம் எங்களுக்கெவ்வளவும் தெரியாது இன்னும் நறுக்கிப்பிழிந்தபோதிலும் எங்களுக்கென்னதெரிந்து சொல்லப் போகுறோம் கிருபையுற்று மன்னிக்கவேண்டும் ராக்ஷதவீரர்களே பெண்படைச்சேனைகளே.

(பெரியராக்ஷதவீரர்கள்-வ-ம்.) அடா தம்பிமார்களே இவர்களை எப்படிக்கொன்றாலும் பிரயோசனமில்லை நாம்வீரமாமயேந்திரத்தைச்சேர்ந்து ராஜனிடம் இந்திரனும் இந்திராணியும் அகப்படாத சங்கதியைதெரிவிப்போம் வருவீர்கள் தம்பிமார்களே.

(இராக்ஷதவீரர்கள்-வ-ம்.) அப்படியே செல்வோம் வருவீர்களப்பா அண்ணமார்களே.

## இராக்ஷதர்கள் விருத்தம்.

சுந்தரவிண்ணுடெல்லாம் சோதித்துப்பார்த்தோமய்யா
இந்திரன்மனைவியாரும் இருந்திடுமிடமேகாணோம்.

(இராக்ஷர்கள்-வ-ம்.) இராஜாதி ராஜராஜகெம்பீரா நாங்கள் இந்திரபுரம்சென்று ஒவ்வொரு இடங்களிலும் பார்த்தும் இந்திரனும் அவன்மனைவியும் அகப்படவில்லை அங்கிருக்கும் தேவர்களை படாதபாடுபடுத்தி அண்ணாந்தாள்போட்டு கிட்டிமாட்டி இன்னும் அனேகமான தொந்திரவுகள் செய்தும் அவர்கள் போனவிடம் தெரியாதென்று சொல்லிவிட்டார்கள் எங்கனோ ஓடிமறைந்தான் ராஜகெம்பீரா.

(சூர-வ-ம்.) மந்திரி நமது பட்டணத்திலுள்ள பலகோடி தூதரைவரவழைப்பாய் மந்திரி.

(மந்-வ-ம்.) இதோவரவழைக்கின்றேன் ஆண்டவா.

(மந்-வ-ம்.) அடா சேவகா நமதுபட்டணத்திலுள்ள தூதர்களை வரவழைப்பாய் சேவகா.

(சேவ-வ-ம்.) அப்பா தூதர்களே ராஜன் அழைத்துவரச் சொன்னார் வாருங்கள்.

(தூதர்-வ-ம்.) இதோ ஓடிவருகுறோமப்பா சேவகா.

(தூதர்-வ-ம்.) போற்றி போற்றி இராஜகெம்பீரா போற்றி எங்களை யாதுகாரியமாக வரவழைத்தீர்தெரிவிக்கவேண்டும் இராஜகெம்பீரா.

(சூர-வ-ம்.) தூதர்களே நீங்கள் அதிகவிரைவாய் விண்மண் பாதலங்களாகிய இம்மூன்றிடங்களெங்கும் கிரமமாக ஆராய்ந்து இந்திரனையும் இந்திராணியையும் இருக்குமிடம் தெரிந்துரைப்பீர்கள் தூதர்களே.

(தூத-வ-ம்.) சுவாமி இப்பொழுதே சென்று தெரிந்துவர செல்கின்றோம் சுவாமி.

## தூதர்கள் தரு.

இ-ம்-தன்யாசி-அடதாளம்.

பல்லவி.

தேடித்தேடிப்பார்த்தும் தேவர்கோனிருப்பிடம்
தெரியவில்லை என்குசெய்குவோம்.(தே)

சரணம்.

நாடிமூன்றுலோகமும் நாமடையவேவெற்றி
ஆடிப்பரந்தெங்கும் அலைந்தலைந்துசுற்றி.(தே)

சூரனேதுசெய்வானே சோருதேயுள்ளமும் வீரத்தனத்திலே
ஆரவாரங்களுடன் ஆர்பரித்துவந்து
தேறித்தெளிந்திடாமல் தியங்குதேமனம்நொந்து (தே).

(தூதர்-வ ம்.) தூதர்களே இந்தமூன்றுலகமும் பாராத இடமில்லை இந்திரனும் இந்திராணியும் அகப்படவில்லை இந்தசீகாழித்தலத்தில் தானிருப்பார்களென்று எண்ணினேமே இங்குமகப்படவில்லையே என்செய்வது வேரிடம்செல்வோம் வாருங்கள் தூதர்களே.

(தேவர்-வ-ம்.) ஐயாதேவர்களே எல்லாசுகங்களையு மனுபவிக்க பூலோகத்திலிருக்கப்பட்ட சீகாழித்தலத்தில் இறைவனுகிய இந்திரனும் இந்திராணியும் ராக்ஷதவீரர்களுக்குப் பயந்து யாதொரு துன்பமில்லாமல் குயிலுருக்கொண்டு அத்தலமடைந்து தூதர்கள் தேடிப் போகுங்காலம் மூங்கிலுறுக் கொண்டிருக்க ராக்ஷதவீரர்கள் தேடிப்பார்த்து காணுமல் போய்விட்டார்கள் இனிநாம் சீகாழித்தலம்சென்று இந்திரனிடம் நாம்பட்டகஷ்டங்களை தெரிவித்து எல்லோரும் கைலையங்கிரிக்கிச் சென்று நமது குறைகளைபோக்கிக் கொள்வோம் வாருங்கள் தேவர்களே.

(தேவர்-வ-ம்) தடையில்லாமல் செல்வோம் வாருங்கள் தேவர்களே.

## தேவர்கள் விருத்தம்.

இந்திரபூபாபோற்றி இனிஎங்கள்குறையைத்தீர்க்கச்
சுந்தரன்கைலைசெல்வோம் சுருக்குடன்வருவாய்போற்றி.

(தேவர்-வ ம்.) போற்றி போற்றி இந்திரபூபா நீரும் உங்கள் மனைவியாரும் ராக்ஷதர்களுடைய மாய்கையில் அகப்படாமல் இந்தசீகாழித்தலத்தில்வந்து பூந்தோட்ட மமைத்து சிவபெருமானை பூஜித்து சுகமாயிருக்கின்றீர்கள் நாங்களந்த ராக்ஷதர்களிடத்தில் சிக்கி எங்களுக்கு கிட்டிஅண்ணுந்தாள் மாட்டி அவர்களால் பலவிதமான துயரங்களை அநுபவித்து பிறகு எங்கள் வேண்டுதலைக் குறித்து அவர்கள் மனமிரங்கி விட்டுப்போய்விட்டார்கள் இப்படிக்குக் கஷ்டப்பட நீங்கள்பார்ப்பதழகா இப்பொழுதே அந்த ராக்ஷதப்பூண்டை பற்றறுக்க கைலையங்கிரிக்கிச் சென்று நமது குறைப்பாடுகளை சிவபெருமான்சந்நதியில் முறையிட்டுக் கொள்வோம் வாரும் இந்திரபூபா.

(இங்-வ-ம்.) தேவர்களே இந்திராணிக்கித் தெரிவித்து வருகிறேன் அப்படியே செல்வோம் வருவீர்கள் தேவர்களே.

(இங்-வ-ம்.) கண்மணி யான்கைலேயங்கிரிக்கிச் செல்கின்றேன் வருமளவும் அரிஹரபுத்திரரை வரவழைத்து காப்பாற்ற அவரை தியானிக்கின்றேன் கண்மணி.

## இந்திரன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-சாப்பு-தாளம்.

அரிஹரபுத்திரரேவாரீர் ஆபத்தைத்தீர்க்க. (அரி)
பரிகரித்துள்ங்கள் பாபங்கள்போக்க
விரிதருமுலகினில் விரைவினில்காக்க (அரி)

## அரிஹரப்புத்திரர் விருத்தம்.

இந்திரனேகதறவேண்டா மிதோவந்தேன்வந்தேனுனே
தந்திராவுன்னைக்கார்த்துத் தழைத்திடச்செய்யத்தானே.

(அரிஹ-வ-ம்.) இந்திரா மனவருத்தம் விடு இதோவந்தேன் யாதுவரம் விரும்பினேயோ அதைத்தரவிருப்புற்றனம் கேழ்ப்பாய் இந்திரா.

(இங்-வ-ம்.) போற்றி போற்றி அரிஹரப்புத்திரரே போற்றி சூரபத்மன் முதலானவர்களால் மிகவும்வருந்தி பொன்னுலகவாழ்வை யிழைந்து பதிதராய் இத்தலத்தில் வந்தும் அக்கொடியவருக்கஞ்சி மூங்கிலுருக்கொண்டு மனைவியும் நானுமாகத் தவம்செய்து கொண்டிருக்க தேவர்களில்சிலர் சூரனுக்கஞ்சி என்னை உலகமெங்கும்தேடி முடிவில் இத்தலத்திலென்னைக்கண்டு தங்களுக்கு நேர்ந்தகுறைப்பாடுகளைத் தெரிவித்து அதனைபோக்கி ரக்ஷிக்கும்படியாக முறையிட்டுப்புலம்பிநின்று திருக்கயிலாயத்திற் கென்னை அழைத்துப்போய் பரமசிவத்தினிடத்தில் குறைகளைவிண்ணப்பம் செய்து அவரனுக்கிரகத்தைப்பெற்றுவரத் தீர்மானித்திருப்பதால் யான்போய்வருகிறபரியந்தம் எனது பத்னியாகிய இந்திராணியை ராக்ஷதர்களுடைய பயமில்லாமல் காப்பதுதேவரீர் கடமையாகவிருக்கவேண்டும் அரிஹரப்புத்திரரே.

(அரிஹ வ ம்.) தேவர்கோனே உமதுமனைவிக்கு ராக்ஷதர்களுடைய உபத்திரவம் நேராமல்பாதுகாத்து வருகின்றேன் தனி

யேவிட்டுவந்தோ மென்கிற அதயிர்யம்வேண்டாம் கயிலையங்கிரிக்கிச்செல்வாய் தேவர்கோனே.

(இ-ந்-வ-ம்.) மகாபாக்கியம் இதோசெல்கின்றேன் ஆபத்தைத்தீர்த்தவா.

(அரிஹ-வ-ம்.) சேனைத்தலைவனை மகாகாளா இந்திரன்பரமசிவனை தரிசித்து வருமளவும் இந்திராணிக்கோர் கவலையும் நேராமல்பாதுகாத்துவருவாய் செல்கின்றேன் மகாகாளா.

(மகாகா-வ-ம்) சொற்படிகாத்து வருகின்றேன் மகாநுபாவா.

(இந்-வ-ம்.) பெண்மணி உனக்கு யாதொருகுறையும் இனிநேரிடாது மனக்கவலை யற்றிருப்பாய் யான்தேவர்களுடன் கைலையங்கிரிக்கிச் செல்கின்றேன் பெண்மணி.

(இந்-வ-ம்.) சீக்கிரம்போய் வருவீர்நாயகா.

## இந்திரன் விருத்தம்.

தேவர்காளிப்போதேபோய்த் திங்களைத்தரித்தோனைக்கண்
டாவலாய்ப்பணிவோம்வாரீர் அணுகாமல்வினைகள்தானே.

(இந்-வ-ம்.) தேவர்களே பரமசிவன்வீற்றிருக்கும் கைலைக்கிச்செல்வோம் வருவீர்கள் தேவர்களே.

(தேவர்-வ-ம்.) இதோவருகிறோம் இந்திரபூபா.

## இந்திரன் விருத்தம்.

புந்தியில்சிவனைப்போற்றிப் புளகிக்கும்புனிதஞான
நந்திஎம்பெருமானேயுன் நற்பாதம்போற்றிபோற்றி.

(இந்-வ-ம்.) போற்றி போற்றி நந்தி எம்பெருமானே போற்றி.

## நந்திதேவர் விருத்தம்.

இந்தநல்வேளைதன்னி லிணையிலாத்தேவரோடு
வந்ததோர்காரணத்தை வண்மையாயுறைசெய்வாயே.

(நந்தி-வ-ம்) தேவர்கோனே யாதுகாரணமாய் தேவர்களுடன் இங்குவந்தீர் தெரிவிப்பீர் தேவர்கோனே.

## இந்திரன் தரு.

இ-ம்-தர்பார்-ரூபகதாளம்.

பல்லவி.

சூரனாலோடிவந்தோம் அவன்சொல்லும்வேலைசெய்து
சோர்வடைந்து நைந்து.(சூர)

சரணம்.

ஆருங்கதியில்லா தாதரித்திடவே
ஆலமுண்டோ னிடம்வேண்ட
ஆவிதடுமாறி அலைந்தோடிசேர்ந்தோமிங்
கமையும்வேளையிலே அய்யனிடம்தூண்ட. (சூர)

(இந்-வ-ம்.) ஞானானந்த சொரூபமாய் விளங்கும் நந்தியெம்பெருமானே சூரபதும னிரக்கமற்று ஏவியதகாத பணிவிடைகளைச்செய்து மிகவும்வருந்தி மற்றொரு சார்புமில்லாமையால் அடியோங்கள் துயரங்களை சிவபிரானுக்குத் தெரிவித்து அதற்கொரு நற்றுணைமார்க்கத்தைத் தேடிப்போகவந்தோம் நந்தி யெம்பெருமானே.

(நந்தி-வ-ம்.) ஏபுரந்தரா இன்னமும் உங்கள் வருத்தங்களொழியுங்காலம் சமீபிக்கவில்லை பரமேஸ்வரன் சனகர்சனந்தனர் சனற்குமாரர் சனாதனராகிய தவசிரேஷ்டருக்கு ஞானயோக நிலையைக்காட்டிக்கொண்டு ஏகாந்தமா யிருக்கின்றனர் இச்சமயம் யாவரும்போய் தரிசிக்கக்கூடாதென்பதை அறிவாய் புரந்தரா.

(இந்-வ-ம்) சுவாமி நாங்கள் மறுபடியும் இவ்விடம்விட்டு எவ்விடம் போனாலும் ராக்ஷதர்கள் எங்களைப்பிடித்து சிறையடைப்பார்கள் இதற்குச்சந்தேகமில்லை ஆதலால் தீனசரண்யனை நமஸ்கரிக்க காலம்நேருமளவும் தேவரீர் எழுந்தருளும் முகவாயில்மண்டபத்துக் கொருபாரிசத்தில் காத்திருக்கிறோம் தேவரீ ரன்புற்று விடைதரவேண்டும் சுவாமி.

(நந்தி-வ-ம்.) தேவராஜனே நீங்கள் யாவரும் வருத்தமின்றி இத்தலத்தி லிருக்கக்கடவீர்கள் தேவராஜனே.

## பொது கண்ணிகள்.

இ-ம்-கேதாரம்-எகதாளம்.

கொண்டல்போலிடியிடித்துக் கொக்கரித்துமே
அண்டரண்டம்தத்தளிக்க அசமுகிவாராள்
பரபுருஷர்கள்எவர்களையுமே பார்த்துகூடவே

சரமாய்காமலாகிரியால் சரசமாடவே
கெட்டஎண்ணமனதில் கொண்டுகெடுக்கயாரையும்
திட்டமுடனெழும்பி தீப்பொரியைவாரியே
துடுக்குவார்த்தையடுத்துபேசி துன்முகியோடு
முடுக்குடனிந்திராணி சோலைமுனைக்துதேடியே
செம்பட்டமயிரெங்கணுமாய் செழித்திலங்கவே
தம்பட்டம்வாய்ப்பறையடித்து தாண்டிவாராளே.

(அசமு-வ-ம்.) அடிபாங்கி இந்தசெழிப்பான நந்தவனத்தை ப்பார்த்தனையா தேவேந்திரன் நமக்கஞ்சி பொன்னுலகத்திலிருந்த கற்பகச்சோலையை இத்தலத்திலிறக்கி வைத்தான்போ லிருக்கிற தடி நான்திரியாத இடமிராது நான்அணையாத தேவர்களும் முனிவர்களும் தவசிகளும் யிரார்கள் அப்படி சேரப்போன எந்தயிடங்களிலும் இப்பேர்ப்பட்ட உன்னதமான பூங்காவைக் கண்டதில்லை அம்மம்ம? இதன்விசாலத்தையும் தழைத்துக்குளிர்ந்து நிழலைப்பரப்பி பரிமளம் வீசுவதைப்பார்க்கப் பதினாயிரம் விழிகள்வேண்டும் போலிருக்கிறதடி அடி இதனுள்புகுந்து முற்றிலும் பார்த்துப் போவோம்வாடி பாங்கி.

(மகாகா-வ-ம்.) ஒ ஒ இவள் சூரன்தங்கையாகிய அசமுகியாயிருக்கவேண்டும் இவள் துன்மார்க்கிஎன கேள்விப்பட்டிருக்கின்றோமல்லவா ஆகிலும் இப்பாதகியினது செய்கைகளைத் தெரிந்த பின்பு அதற்குத்தகுதியான பிராயச்சித்தத்தை நடத்தக்கடவோம் பக்கத்திலிருந்து பார்த்துக்கொண்டிருப்போம்.

## இந்திராணி தரு.

இ-ம்-செஞ்சுருட்டி-ஏகதாளம்.

பல்லவி.

சம்போசிவசங்கரனே சமயங்கார்தர்ப்பரனே. (சம்)

அநுபல்லவி.

செம்பொனம்பலவனே தேடுறேனுந்தனையே. (சம்)

சரணம்.

கருணாகரனேஎன்னை கடைக்கண்பார்த்தருள்மன்னே
சரணாகதியடைந்தேன் சங்கடங்களேகஇன்னே. (சம்)
வேதாந்தசித்தர்கோடி வேண்டிப்பணியும்போதா
பாதாம்புயத்தைநாளும் பற்றினேனேபிரக்கியாதா. (சம்)

(அசமு-வ-ம்.) ஆ ஆ இவள்வடிவத்தைப் பார்த்தனையா தோழி இவளே இந்திராணியாகும் இவள் இளமைப் பருவத்தைப்போன்ற ரூபலாவண்யத்தை இதுபரியந்தம் நாமெவ்விடத்திலும் கண்டதில்லை இத்தகையசுந்தரமுள்ளவள் அண்ணனுக்கஞ்சி சகலவளங்களும் அமைந்து பலராலும் புகழப்பெற்ற பொன்னுட்டை விட்டிவ்விடம்வந்து புகுந்தொளித் திருக்கின்றனள் என்தமயன் இவளிடத்தில் அதிகமய்யல்கொண்டு பிடித்துவரும்படிக்கி அளவற்றசேனைகளை அநுப்ப அவர்களும் வீராவேசத்துடன் ஆயுதபாணிகளாய்தெய்வலோகத்தைச்சேர்ந்து அரண்மனைமுதலிய இடங்களில் தேடிக்காணுது மீட்டும் தூதர்களாலும் கிடையாமல் நமக்கு சுலபமாய்க் கிடைத்தவளை அண்ணனை சேரும்படி கொண்டுபோகலாம் இவ்விடத்தி லெவர்களும் காவலுமில்லை அருகில்செல்வோம் தோழி.

(துன்மு-வ-ம்.) அம்மா இவளை எந்தவிதத்திலும் உங்களண்ணனுக்குக் கொண்டுபோய் சேர்க்கவேண்டும் தாயே.

(இந்திராணி-வ-ம்.) ஆ ஆ இதென்ன இப்பேர்ப்பட்ட கோரமான உருவுடன் யாரோ நமக்கெதிரில் நிற்கின்றுள் இவளைப்பாற்குமிடத்தில் பசாசைப்போலவும் ராக்ஷசிபோலவும் நிருத்தகன்னிகையைப்போலவு மிருக்கின்றது அல்லது காளிக்கேவல் செய்பவளோ இன்னுளெனத் தோன்றவில்லையே அதிகபயமாகுதே சரி இந்த இடம்விட்டு அப்புறம் செல்வோம்.

## அசமுகி விருத்தம்.

நில்லடிஇந்திராணி ஏன்நிலையைவிட்டோடிவந்தாய்
சொல்லடிதூதராலே சுருக்குடனண்ணனுன்னை
புல்லிடஅழைக்கத்தேடப் புலப்படாதொளித்தாயிங்கு
மெல்லடிவைத்தென்னேடு மேன்மையாய்வருகுவாயே.

(அசமு-வ-ம்.) அடி நில்லடிநில் இந்திராணி உன்மேல் எனது அண்ணன் அதிககாதல்கொண்டு வீரர்களையும் தூதர்களையும் விட்டுத் தேடிப்பார்க்க அகப்படாமல் இங்குவந்து ஒளித்திருக்கின்றனை எனது அண்ணன் சகலசெல்வங்களும் அழியாத காயமும்பெற்று அரசுசெய்திருப்பதைப்போல உனது புருஷன் இத்தகையவிஷயங்க ளெதுவுமில்லாததாலும் தேவர்களும் முனிவர்களும் இந்திரனும் எங்களிடத்தில் ஏவல்செய்யுந் திரமைகளையும் அடைந்திருக்கும் எங்கள் அண்ணனைச் சேர்ந்தால் மகத்யிஸ்வரியத்தை யடைவாய் என்னுடன் வருவாயடி இந்திராணி.

## இந்திராணி விருத்தம்.

தீங்குகளுறைக்கவந்த தீப்பொறிவாயைமூடிப்
பாங்குடனிவடம்விட்டுப் பாதகியோடிப்போடி.

(இந்திரா-வ-ம்.) அடிசண்டாளி கற்புநிலைதவறுத் எனக்கு உலகவிரோதமான நடைகளைப்போதிக்கத் துணிந்தாய் இங்கிருந்தால் வுன்மானமழிந்து மதிகுலையநேரிடும் சீக்கிரம் இவடம் விட்டகலுவாயடி கல்லைப்பிளக்கும் வார்த்தைசொன்ன துஷ்டி.

## அசமுகி தரு.

இ-ம்-ஆனந்தபைரவி-ஏகதாளம்.

பல்லவி.

நில்நில்லடிஎந்தன்சொல் லென்னடிமனம் கல்லினையாததென்சொல். (நில்)

அநுபல்லவி.

வல்லவரெவர்வந்தாலும் வணங்கிடச்செய்குவேன்
வாதுபுரியாதென்முன் வணிகரம்பற்றிழுப்பேன். (நில்)

சரணம்.

வாடிஎந்தனுடனேஓடி அண்ணனைநீயேகூடி சுகமிருப்பாய்நாடி
தேடிவந்தேனுனக்காய் தெவிட்டாதேயிந்தசொல்லை
மாடிமேல்வைத்துன்னையான் மகிழ்வேனில்லாமல்தொல்லை. (நில்)

## இந்திராணி கண்ணி.

இ-ம்-முகாரி-ரூபகதாளம்.

அய்யய்யோபாதகி அலைக்கழித்திழுக்குருள் அய்யனுரே
பூனைவாய்க்கிளிபோலே புலம்பவிட்டாயோநீ அய்யனுரே
பாதகிகரத்தையும் பற்றியே இழுக்குருள் அய்யனுரே
பாம்பின்வாய்த்தேரைபோல் பதைக்குறேனேஎந்தன் அய்யனுரே
ஓடிவந்தெனக்கிப்போ உதவிசெய்துகாப்பாய் அய்யனுரே.

## மகாகாளன் விருத்தம்.

கோரதந்தங்களோடு கூரியவாளைத்தாங்கி
வீரமாயோடிவந்தேன் விரண்டிடவேண்டாந்தாயே.

(மகாகா-வ-ம்) அம்மா இதோவந்துவிட்டேன் அஞ்சவேண்டாம் வாழிவாழியம்மா இப்பாதகியாகிய கொடிய அசமுகிக்கெவ்வளவும் பயப்படவேண்டாம் உன்னைத்தொட்ட இவள் கரத்தை வெட்டித்தள்ளி விடுவிக்கிறேன் தாயே

(இந்திரா-வ-ம்.) போற்றி போற்றி அரிஹரப் புத்திரருக்குப் படைத்தலைவருகிய மகாகாளரே போற்றி.

(மகாகா-வ-ம்.) ஏதுஷ்டியாகிய அசமுகி; தேவராஜன் பத்தினியாகிய இந்திராணியை வஞ்சித்தெங்கே கொண்டு போகுருய் எவர்களுமிங்கில்லையென்று நினைத்திந்த காரியத்தை செய்யலாளுயோ துஷடிநில்லடி நில்.

(அசமு-வ-ம்.) அடாபயலே முத்தொழிலை நடத்துகின்ற மும்மூர்த்திகளும் என்னைக்கண்டு நடுங்குவார்களெனின் நீஎவ்வளவு உன்னை இவளைக்காக்கும்படியாய் வைத்தவனுரடா சொல் மூடா

(மகாகா-வ-ம்.) அடிதுன்மார்க்கி திரிலோகங்களினுந் துன்பமில்லாமல் காக்கும் தீனதயாபரன் நீருண்டமேகத்தை யொத்த கரியநிறமபெற்றவன் வெள்ளையானையின்மீதுபவனிவருபவன் வலியினுக்கொப்பற்ற அரிஹரப்புத்திரன் எனக்கிப்பணிவிடைகளைகட்டளைஇட்டார் நான் அவர் சேனைத்தலைவனுகும் என்பேர் வீரரில் வீரனுன் வீரமாகாளன் இனியாவது இந்திராணியை விட்டுவிடு துன்மார்க்கி.

(அசமு-வ-ம்.) அடாபயலே நீ அந்த இந்திரனுடைய தொண்டனல்லாமல் வேறல்ல என்னை மிரட்டவந்தபடியால் இதோ என் கரத்தில் விளங்கும் சூலத்தால் மார்புக்குலக்கு பார்த்து மாளும்படி விடுகிறேன் பாரடா துஷடா.

## அசமுகி தரு.

இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

சிறந்தசூலத்தைவிடுத்தேன் சிறுவனேயுந்தன்மேலே. (சிற)
நிறந்தமார்பையுடைக்க நிகரில்லாமலேயிப்போ
கறந்துறையும்படிக்கி கண்டித்துகளைகப்ப. (சிற)

## மகாகாளர் தரு.

இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

வீரமாய்வாளாலேவெட்டினேன் வெடிபட்டநீக்கினுன்பொடிபொடியாக்கிட
தீரமாய்விட்டசூலத்தை தேவர்களுமஞ்சும்படி
கோரமாய்வந்தரூபியே கோர்த்துகுலையும்படி. (வீர)

(அசமு-வ-ம்.) அடிதுன்முகி இவளைஜாக்கிரதையாய் பிடித்துக்கொள் நான்மலைகளைவாரி இவன் தலையின்மீதுபோட்டு கொன்றுவிடுகிறேன் ஜாக்கிரதையாய் பிடித்துக்கொள் துன்முகி.

(துன்மு-வ-ம்) அம்மா அதிகஜாக்கிரதையாய்ப் பிடித்துக்கொண் டிருக்கின்றேன் தாயே.

## அசமுகி தரு.

இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

உயர்ந்தமலையைத்தூவினேன் உனதுதலைதரிக்க, (உய)

## மகாகாளன் தரு.

இ-ம்-மோகனம்-ஆதிதாளம்.

ஓங்கிவாளாலேவீசினேன் ஓடும்படிதுண்டுதுண்டாம். (ஓ)

(அசமு-வ-ம்.) ஆஹா இவன் கயிலிருந்தவாளும் பொடியாய் போய்விட்டது இனிநாம் இந்திராணியைப்பிடித்தேகுவோம் இனி இவனால் என்னசெய்யக்கூடும் இதுவேசமயம் செல்வோம்.

## மகாகாளன் தரு.

இ-ம்-கமாஸ்-ஏகதாளம்.

பல்லவி.

நில்லடிதுன்மார்க்க கள்ளியேநீ
நீங்குறுயிவடம்விட்டு நிகழ்த்தாமலெந்தனிடம். (நில்)

சரணம்.

வலுமைகொண்டவளைப்போல் வளைத்திட்டாயேசண்டை
வாதுபுரிந்தென்னுடன் வகையறியாமல்
வய்யகங்களித்திடவே வாடிடயுடைவாளாலே
வலதுகரத்தைப்பற்றி வாட்டியறுத்திட்டேன்பார். (நில்)

(மகாகா-வ-ம்.) அடிதுன்முகி இந்திராணியைத்தொட்டகை உனக்கு இருக்கலாகாது இதோவெட்டித்தள்ளிவிட்டேன் சீ ஓடிப்போவீர்கள் துஷ்டிகளே.

(அசமு-வ-ம்.) அடிதுன்முகி திரிமூர்த்திகள்முதலிய பலரும் புகழவாழும் என்தமையன்முன் இக்கோலத்துடன் எப்படிபோவேனடி எவர்களும் இனி என்னைக்கூட விரும்ப மாட்டார்களே என்னடிசெய்கிறது தோழி.

(துன்-வ-ம்.) அம்மா அசமுகி நாம்விரைவில் வீரமாமயேந்திரஞ்சேர்ந்து நமதரசனுக்கு நமக்குநேர்ந்ததை தெரிவித்தால் அந்த நிமிஷத்தில் தேவர்களைப் பிடித்துவந்து தகுந்த தண்டனைகளைசெய்து கொல்லுவார் மேலும் நமக்குமாத்திரம் இவ்வூனம் நேர்ந்ததென் றெண்ணவேண்டாம் முற்காலத்தில் தக்கன்செய்த யாகத்தில் வந்திருந்த தேவகன்னியர்கள் வீரபத்திரரால் சிகையரியுண்டு மூக்குநாக்கு முலைமுதலிய உறுப்புகள் ஊனப்பட்டு வருந்திமானங்கெட்டதைக் கேட்டதில்லையோ நமக்குமாத்திரந்தானா இப்படிநேர்ந்தது எழுந்திரும்போவோம் தாயே.

## அசமுகி விருத்தம்,

பாரடியுனைப்பிடித்துப் பாங்குடன்தேவரோடு
நேரிடக்கொண்டுவந்து நெகிழவேசிறையடைத்து
வேரடிக்களைவதைப்போல் வெட்டிடச்செய்யாவிட்டால்
காரிடிஇடிக்குஞ்சூரன் கனதங்கையாவேனோபார்.

(அசமு-வ-ம்.) அடி இந்திராணி உன்னையும் தேவர்களையும் தூதர்களால் பிடித்துவரச்செய்து மாறுத சிறையடைத்து வெட்டிச்சின்னபின்னம் செய்யாவிட்டால் சூரன்தங்கையாவேனோபாரடி இந்திராணி.

(மகாகா-வ-ம்.) தாயே அசுரப்பட்டி மக்களுக்கெவ்வளவேனுமஞ்சாதே உன்கணவனாகிய தேவராஜன் வருமளவும் உனக்கியாதோரிடையூறின்றி காக்கக்கடவேன் மனக்கவலையற்று பழயபடியே தவம்செய்யக்கடவீர் நான் எனதிருப்பிடஞ் செல்கின்றேன்தாயே.

(பொ-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களேநாரதர் இந்தவிஷயங்களை யெல்லாம் தெரிந்து கயிலாயம்சென்று இந்திரனைக்கண்டு ஆசீர்வதித்து இந்திராணிக்கடுத்த துன்பங்களையும் மகாகாளன் சகாயங்களையும் சொல்லக்கேட்ட இந்திரன் நந்தியெம்பெருமானிடம் உத்திரவுகேட்டு பூலோககயிலாயமாகிய சீகாழித்தலத்தை வருதல் காண்பீர்கள் கனவான்களே.

## இந்திரன் விருத்தம்.

நலமதேநாளும்சொல்லும் நாரதமுனியேதிரேகம்
ஜலமதேபெருகவந்த சங்கையையுறைப்பீர்போற்றி.

(இந்-வ-ம்.) போற்றி போற்றி நாரதமகாமுனிவரேபோற்றி

## நாரதர் விருத்தம்.

பொன்னகர்க்கிறைவனான புரந்தராயுன்னைக்காண
இன்னகர்க்கோடிவந்தேன் இன்பனேவாழிவாழி.

(இந்-வ-ம்.) சுவாமி ஏதாயினும் விசேஷமிருந்தால் தெரிவிக்கவேண்டும் சுவாமி.

(நார-வ-ம்.) இந்திரபூபா தெரிந்தவரையில் சொல்லுகிறேன் கவனித்துக்கேள், சூரன்தங்கையாகிய அசமுகிஎன்பவள் உனது தேவியின் கரத்தைப்பற்றி இழுக்க மகாகாளர் அவளதுகரத்தைத் துண்டித்ததுடன் தோழியாகிய துன்முகியையும் கரமறுத்தனுப்பினர் அப்பா இந்திரபூபா.

(இந்-வ-ம்.) சுவாமி யான் என்மனைவியைப்பார்த்து வருகின்றேன் சுவாமி.

(நார வ-ம்.) இந்திரபூபா அப்படியே போய்பார்த்து வருவாய் இந்திரபூபா.

(இந்-வ-ம்.) போற்றி போற்றி நந்திஎம்பெருமானேபோற்றி அடியேனிவ்விடம் வந்தபின்பு என்தேவிக்கு அசமுகியென்னும் பாதகியினால் சிலதுன்பம் நேர்ந்ததாக கேள்விப்பட்டேன் பூலோகத்திற்குசெல்ல எனக்கும் மற்றதேவர்களுக்கும் விடைதரவேண்டும் மகாநுபாவா.

(நந்திதே-வ-ம்.) போய்வரக்கடவீர்கள் தேவர்களே.

## இந்திரன் தரு.

இ-ம்-தன்யாசி-ஆதிதாளம்.

பல்லவி.

நீர்செய்தவுதவிக்குநேரென் செய்யப்போரேன்
நீதிமகாகா காளரே. (நீர்)

அநுபல்லவி.

சீர்பெறவுலகினில் சீகாழியையடைந்து
வேறுகெதியில்லாமல் வேண்டும்போதுவந்து. (நீர்)

சரணம்.

தாவிஎன்மனைவிமுன் தவித்திடும்வேளைவந்த
தயாபரனே நான்மரவேன்
ஆவியுள்ளளவும் அகலாமனமிருக்க
தேவியைக்காத்திட்ட தேவாவுன்பேரிருக்க. (நீர்)
எந்தனுக்கிடரது ஏதும்வாராமலே
என்றும் காருமைய்யனே
சிந்தைநைந்துவாடி சிரழிந்தேன்சூரன்
சொந்தவேலைசெய்து சோர்ந்தேன்வெகுதீரன். (நீர்)

(இந்-வ-ம்.) கண்மணி இவரால் உனக்கு யாதோர் குறைவும் நேரிடாமல் காப்பாற்றினதைப்பற்றி நாம் எந்தகாலத்திலும் இவருடைய விஸ்வாசத்தை மறவாமலிருப்பதோடு இவரே நம்மைபடைத்த ஈசனுகபாவிக்கவேண்டும் கண்மணி.

(இந்ரா-வ-ம்.) நாயகா நானப்படியே தானெண்ணிக்கொண்டிருக்கின்றேன் ஆனால் அந்த அசமுகியானவள் போகும்போது நம்மை எந்தவிதத்திலும் பிடித்து சிறைவைப்பதாய் சொல்லிப்போயிருக்கிறாள் நாயகா.

(இங்-வ-ம்.) நாயகி அவள் அதிகதுன்மார்க்கியாதலால் அவளண்ணனிடம் தெரிவித்து எப்படியாயினும் சயின்யங்களுடன் இங்குவருவார்கள் சீக்கிரம்நாமும் தேவர்களும் புறப்பட்டு மகமேருசாரலுக்குச் செல்வோம் வாராய் நாயகி.

## அசமுகி தரு.

இ-ம்-எதுகுலகாம்போதி-ஏகதாளம்.

பல்லவி.

அண்ணா அண்ணா அண்ணா அண்ணா அலையுதேயென்னுவிசோர்ந்து (அ)

அநுபல்லவி.

மண்ணில்யாவனும்மயங்கிப்புரள மகிழ்ந்தாயோநீயும்சேர்ந்து. (அ)

சரணம்.

அழியாவரமரன்தந்த தழிவுவந்ததோதோணேனே
பழிவரக்கரமறுப்புண்டு பார்த்தழவுமானனே. (அண்)
பெண்ணைப்பிறந்திந்தபலன் பெற்றதேயினிப்போதும்போதும்
குண்ணிமானமழியவும்நான் கோரினாயோநீயேதீதும். (அண்)

## சூரபத்மன் தரு.

இ-ம்-அடாணா-ஆதிதாளம்.

பல்லவி.

கொஞ்சமுமஞ்சிடாமலே மிஞ்சிக்கரமறுத்தவனார்அவனை
தஞ்சமென்றடையச் செய்வேன்பார். (கொஞ்)

அநுபல்லவி.

வஞ்சிக்கொடிபோலவே வளர்த்தேனேவுன்னைநானே
செஞ்சடைமகுடமின்னும் சிவனும்மயங்குவானே. (கொஞ்)

சரணம்.

ஆரோவென்றுன்னைஎண்ணி அவமதித்திப்படியும்
அலங்கோலமாய்செய்தான் அறிகுறேனெப்படியும்
ஊரும்பேரும்தெரிந்தால் உரைப்பாய்உண்மையைபாங்காய்
சிரங்குலைந்திடச்செய்து சிதைப்பேனவனைசிறந்ததங்கா. (கொ)

(சூர-வ-ம்.) அடிதங்கா வுன்னை இப்பேர்ப்பட்ட மானபங்கம் செய்தவன்யார் அவனைத்தெரிவித்தால் தக்ஷணம் சொல்கின்றேன் தங்கா.

## அசமுகி தரு.

இ-ம்-காதனுமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

சொல்லுவேன்கேளுமண்ணு அண்ணு. (சொ)

அநுபல்லவி.

அல்லல்படஎன்னை அவமதித்திப்படி அனியாயம்செய்திட்டதை
மெல்லவுரைக்கிறேன் மேன்மையாய்முழுமையும் மேவிநீர்கேளுமதை. ()

சரணம்.

பூவுலகம்சுற்றிவரும்வேளையான் புதுமைநகரொன்றதிலன்று
காவிலிந்திரன் மனைவியைஅங்கு கண்டபின்பட்டதின்று. (சொ)
உன்னையணையவுகந்தவளென்று உணர்ந்துகரம்பற்றியழைத்துவர
முன்பின்னறியாமல்மூர்க்கனெவனோ முனைந்துசெய்ததையுர. ()
வல்லமையில்மிகும்வானவரிலொரு வஞ்சகனென்கரமறுத்து
மெல்லியமயிர்பிடித் திழுத்துதைத்துத்தள்ளி
மேலேகினுன்சிரித்து சொன்னேனிதுவே அண்ணு

(அசமு-வ-ம்.) அண்ணு நானும் தோழியும் பூவுலகம் சுற்றிப்பார்த்து வரும்போது ஒருபட்டணத்தில் பூங்காவினைக்கண்டு அதனுள்செல்லுகையில் ஒருவிருக்ஷததடியில் தேவேந்திரன் மனைவியைக்கண்டு உன்புயத்தினையணைவதற்கு தகுதியானவளென்றெண்ணி நன்மையில்வராதபடியால் வலிதில்கரத்தைப்பற்றி அழைத்துக்கொண்டு வரும்போது யாவனோதேவர்களி லொருவன் முன்பின்யோசியாமல் எங்களிருவர் கரங்களையும்வெட்டி சிகையைப்பிடித்துத்தள்ளிக் காலாலுதைத்தானண்ணு.

## சூரபத்மன் விருத்தம்.

வெட்டினதீரனுரோ விபரமாயறிகிலேன்யான்
பட்டணமெங்குஞ்சுற்றிப் பாதகஞ்செய்யன்னுனைத்
திட்டெனக்கொண்டுவந்து தீங்குகள்செய்துன்முன்னே
பொட்டெனவதைப்பேன்தங்கா போயிருமனையில்தானே.

(சூர-வ-ம்.) அடிதங்காவுன்னை இப்பேர்ப்பட்ட மானபங்கம்செய்தவன் இன்னுனெனத்தெரியாததால் இப்பொழுதே யான் இந்திரஜாலமென்னும் ரதத்திலேறி ஒருமுகுர்த்த நாழிகைக்குள் பூமண்டலமெல்லாம் சுற்றிப்பார்த்து தூதர்களுக்கும் திட்டம் செய்து கொண்டுவந்து அப்பாதகனை உன்முன் வதைசெய்குறேன் அரண்மனைசெல்வாய் தங்கா.

## பானுகோபன் விருத்தம்.

அண்ணலேயானேசென்று அமரரையெல்லாமிம்சை
பண்ணவேகொண்டுவாரேன் பாரெந்தன்திராணிதானே.

(பானு-வ-ம் ) அண்ணா அந்தபார்தகருகிய தேவர்களை இந்த க்ஷணத்தில் கொண்டுவந்து வருத்துகின்றேன் உத்திரவளிக்கவேண்டு மண்ணா.

(சூர-வ-ம்.) அடாகுழந்தாய் சேனைப்பெருக்குடன்போய் கொண்டுவருவாய் குழந்தாய்.

(சூர-வ-ம்.) அடாதூதர்களே பிரமன் பஞ்சாங்கம் சொல்ல வந்திருப்பான் அவனை அழைத்துவாருங்கள் தூதர்களே

(தூதர்-வ-ம்.) இதோ அழைத்து வருகின்றோம் மகாராஜனே.

(தூதர்-வ-ம்.) ஓய்பிரமதேவரே ராஜன்உன்னை அழைத்துவரச்சொன்னார் ஓடிவாரும் பிரமதேவரே.

(பிர-வ-ம்.) இதோவருகின்றேன் தூதர்களே

(பிர-வ-ம்.) இராஜ ராஜேஸ்வரா. யாதுகாரியமா யழைத்தீரோ அதைதெரிவிக்கவேண்டும் இராஜ ராஜேஸ்வரா.

(சூர-வ-ம்.) ஏ பாட்டா தேவர்களில்யாரோ யொருவன்என துதங்கையினுடையகரத்தையும் அவள்தோழியினுடைய கரத்தையும் அறுத்துவிட்டானும் அவர்கள் அரண்மனையிலிருக்கின்றூர்கள் யதாப்பிரகாரம் சிருட்டிக்கக்கடவை பாட்டா.

(பிர-வ-ம் ) இதோ ஒருநொடியில் செய்துவிடுகிறேன் மகாராஜனே.

(பிர-வ-ம்.) அம்மா அசமுகி துன்முகி நீங்களிருவரும் அறுப்புண்ட கரங்கள்வளரும்படி செய்தேன் பாருங்கள் அம்மா.

(அசமு-துன்மு-வ-ம்.) எங்களுக்கு கரம்சரியாய் வளர்ந்துவிட்டது பிரமதேவரே.

(பிர-வ-ம்.) சூராதிசூரா எதாப்பிரகாரம் கரங்களிருக்கச் செய்தேன் சூராதிசூரா.

(சூர-வ-ம்.) அடாதூதர்களே துன்முகியை அழைத்து வாருங்கள்.

(தூதர்-வ-ம்.) இதோ அழைத்து வருகின்றோம் பிரபு.

(தூதர்-வ-ம்.) அம்மா துன்முகி உன்னைராஜன் அழைத்துவரச்சொன்னார் வாருந்தாயே.

(துன்மு-வ-ம்.) இதோவருகின்றேன் தூதர்களே.

(துன்மு-வ-ம்.) இராஜகெம்பீரா யாதுகாரியமா யழைத்தீர் தெரிவிக்கவேண்டும் இராஜகெம்பீரா.

(சூர வ-ம்.) பெண்ணே துன்முகி உங்களிருவர் கரங்களறுப்புண்ட இடத்தை எனது புத்திரனாகிய பானுகோபனுக்கு காட்டிவருவாய்.

(துன்மு-வ-ம்) அப்படியே காட்டிவருகின்றேன் மகாராஜனே.

(சூர-வ-ம்.) அடா தூதர்களே சூரியன் சந்திரன் ருதுக்கள் இராசிகள் முதலியோரை அழைத்துக் கொண்டு வருவீர்களடா தூதர்களே.

(தூதர்-வ-ம்.) இதோ அழைத்தோடி வருகின்றோம் மகாஜனே.

(தூதர்-வ-ம்.) ஐயா சூரிய சந்திரர்களே ருதுக்களே இராசிகளே உங்களைராஜன் அழைத்தோடி வரச்சொன்னார் வாருங்களய்யா.

(சூரியர்கள்-வ-ம்.) தடையில்லை வருகின்றோமப்பா தூதர்களே.

(சூரியன்-சந்திரன்-ருதுக்கள்-வ-ம்) இராஜகெம்பீரா எங்களை அழைத்தகாரணம் யாதோதெரிவிக்கவேண்டும் இராஜகெம்பீரா.

(சூர-வ-ம்.) அடா சூரியா சந்திரா ருதுக்களே இராசிகளே என்தங்கையின் கரமறுத்தவன் உங்களுக்குத் தெரிந்திருந்தால் உரைப்பீர்களடா.

(சூ-ச-ரு-ரா-வ ம்.) எங்களுக்குத் தெரியாதய்யா ராஜபரமேஸ்வரா.

(சூர-வ-ம்.) ஏ தூதர்களே இவர்களைக் கொண்டுபோய் சிறையிலடைப்பீர்களடா தூதர்களே.

(தூதர்-வ ம்.) அப்படியே செய்கிறோம் மகாராஜனே.

தூதர்-வ ம்.) ஐயா எல்லோரும் இந்தசிறைச்சாலையி லிருங்கள்,

(பிர-வ-ம்.) ஐயா ராஜகெம்பீரா நீர் கட்டளை இட்ட சூரியசந்திர ருதுக்கள் இராசிகள் இவர்கள் சஞ்சரியாமல் உலகரக்ஷணார்த்தம் நடவாது முக்கியமாய் உமது அரசுக்கே விரோதமா யிருப்பதால் அவர்களைமாத்திரம் மன்னித்து விடுதல்செய்யவேண்டும் ராஜகெம்பீரா.

(சூர-வ-ம்) அடாதூதர்களே சிறையடைத்தவர்களை கொண்டு வாருங்கள்.

(தூதர்-வ-ம்.) இதோ கொண்டுவருகுறோமையா மஹாராஜனே.

(தூதர்-வ-ம்.) சிறையிலிருக்கும் நவக்கிராதிபதிகளே அனைவரும் வாருங்கள்.

(நவக்கிரகங்கள்-வ-ம்.) போற்றி போற்றி மகாராஜனே போற்றி.

(சூர-வ-ம்.) ஏ சந்திரா சூரியா ராசிகளே ருதுக்களே இனி ஜாக்கிரதையாய் அசுரர்களுக் கென்னநேர்ந்த போதிலும் பார்த்துதெரிவிக்கவேண்டும் இல்லாவிட்டால் கொடியதண்டனை கிடைக்குமென்பதை அறிவீர்கள் ஜாக்கிரதையாய் அவரவர்க ளிருப்பிடம் போய்சேருங்கள்.

(பொது-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே பானுகோபன் சயின்யங்களுடன் சீகாழித்தலம்வந்து துன்முகியை கரமறுப்புண்ட இடத்தைக்காட்டும்படி கேழ்க்கும் விதம்காண்பீர்கள் கனவான்களே.

(பானுகோ-வ-ம்.) அடிதோழி எந்தயிடத்தில் கரமறந்தது.

(துன்மு-வ-ம்.) ஐயா அதோதெரிகிற பூங்காவனத்திலய்யா.

### பானுகோபன் விருத்தம்.

மண்ணுலகத்தைவிட்டு மறைந்திட்டார்தேவர்பாகா
விண்ணுலகேகுவோம்நாம் விரைவினில்செலுத்துவாயே.

(பானுகோ-வ-ம்.) பாகா தேவர்களெல்லாம் விண்ணுலகத்திலிருக்கிறதாகதெரிகின்றது ரதத்தைத்துரிதமாய் செலுத்துவாய் பாகா.

### தேர்ப்பாகன் விருத்தம்.

அட்டியில்லா மலங்கு அதிவிரைவாகஏக
தட்டியேஅஸ்வத்தேரை தடையிலாதுய்ப்பேனுனே.

(தேர்-வ-ம்.) மகாராஜனே அதிகவிரைவாய் வானுலகம் செலுத்துகின்றேன் மகாராஜனே.

(தேவர்-வ-ம். போற்றி போற்றி சயந்தமகாராஜனே போற்றி சூரன்புத்திரனுகிய பானுகோபன் சயின்யங்களுடன் நமது பட்டணத்தை முற்றுகைபோட்டுவிட்டான் யாதுதீங்கு நேரிடுமோ தெரியவில்லையே சயந்த மகாராஜனே.

(சயந்-வ-ம்.) விண்ணவர்களே என்னை அருமையாகப்பெற்ற தாய்தந்தையர்களோ சூரன்கொடுமைக்கஞ்சிபோன விடமேதெரியவில்லை நமது குலகுருவாகிய பிரகஸ்பதி பகவானுமிங்கில்லை தேவர்களில் அனேகர் சூரன்தண்டனைக்கிப் பயந்து பதுங்கிப்போயினர் அப்படி இருப்பதில் பயனில்லை இப்போது யான் யுத்தசன்னுகஞ்கப் போகப்போகிறேன் நீங்கள் வரத்தடையிருந்தால் தெரிவிப்பீர்கள் தேவர்களே.

(தேவர்-வ-ம்.) ஐயா சயந்த மகாராஜனே நீங்கள் யுத்தத்திற்குப்போகும்போது நாங்கள் வராமலிருப்போமா செல்வோம் வருவீர் சயந்த மகாராஜனே.

### சயந்தன் கண்ணி.

இ-ம்-மோகனம்-ரூபகதாளம்.

என்னிருப்பிடம் சுற்றிநின்றுயே என்னுடன்
எதிர்நின்று சமர்செய்ய வந்தாயே
என்னமோ யென்றெண்ணி ஏனுகெட்டுப்போருய்
ஏகுவாய் ஏகுவாய் ஏகுவாய் ஏகுவாய்.

### பானுகோபன் கண்ணி.

இ-ம்-மோகனம்-ரூபகதாளம்.

ஏகுவாயென்றென்னை இளக்கரமாய்க்கிட்டி
எதிர்த்துபாணம் விட்டதேதடா.
வேகசரங்களை வீணுயழியும்படி
விட்டேன் விட்டேன் விட்டேன் விட்டேன்.

### சயந்தன் கண்ணி.

இ-ம்-மோகனம்,

விட்டக்கணைகளைப்பார் தொட்டென்கணைகளினுல்
வெடிபடநீக்கினுன் பொடிபொடியாக்கிட

வெட்டெனவேகமாய் வீரும்சரங்களை
விடுத்தேன் விடுத்தேன் விடுத்தேன் விடுத்தேன்.

பானுகோபன் கண்ணி.

இ-ம்-மோகனம்.

வெறியக்கணைகளை விட்டாலும்விடுவேனே
வெற்றியடையாமலே விட்டுன்னைப்போவேனோ
பொறிகள்கலங்கிட பொற்றவில்லைவளைத்து
போட்டேன் போட்டேன் போட்டேன் போட்டேன்.

(பானு-வ-ம்) அடாவீரர்களே வெள்ளையானையின்மீது வந்த சயந்தன் மூர்ச்சித்து விட்டான் அவனையும் மற்றதேவர்களையும் இவர்கள் பத்தினிமார்களையும் கட்டிக்கொண்டு பொன்னுலகத்தைநீங்கி முன்னதாக வீரமாமயேந்திரஞ் செல்வீர்கள் யான்பின் தொடர்ந்து வருகின்றேன் வீரர்களே.

(வீரர் வ-ம்.) அப்படியே இதோசெல்கின்றோம் பிரபு.

(பானு-வ-ம்.) அடா சூரர்களே இந்த பொன்னுலகத்தை கொளுத்தி சாம்பலாகச்செய்து விடுங்கள் செல்வோம்.

(சூரர்-வ-ம்.) இதோ கொளுத்திவிடுகிறோம் மகாராஜனே.

(சூரர்-வ-ம்.) பிரபு விண்ணுலகத்தைக் கொளித்திவிட்டோம் வாரும் நமதுதேசம் செல்வோம் பிரபு.

(பானு வ-ம்.) அடா சூரர்களே வாருங்கள் நமதுநகரம்செல்வோம் சூரர்களே.

(பானு-வ-ம்.) அண்ணா இந்ததேவர்களிடத்தில் அதிகபோர்செய்து விண்ணுலகத்தையும் நீறுக்கி இவர்களைக் கட்டிக்கொண்டு வந்தேன் அண்ணா.

(சூரன்-வ-ம்.) அடா காவலாளிகளே இவர்களனைவரையும் சிறைச்சாலையிலடைப்பீர்கள் காவலாளிகளே.

(காவலர்-வ-ம்.) இதோ அடைத்துவைக்குறோம் மகாராஜனே.

(பொது-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே இந்திரலோகத்துவெள்ளையானை யானதுபானுகோபனுடன் போர்செய்து முடியாமல் அரசனில்லாதவூர் பாழுரென்றெண்ணி சயிந்தவனுக்காக

இறங்கி விண்ணுலகம்விட்டு மண்ணுலகம்வந்து பலதலங்களை சேவித்து கடையிற்றிருவெண்காடென்னும் பெருமையிற் சிறந்த நகரைக்கண்டு பரமசிவகோலமாகிய லிங்கத்தினைஸ்தாபித்து சோடசோபசாரங்கள் செய்துவர பரமசிவன் களித்து போரில்பட்டகாயங்களைமாற்றி வேண்டியவைதையும் தந்தபிறகு அப்பதியை நீங்காமல் லோகநாயகனை வழிபட்டிருந்ததென்று அறிவீர்கள் கனவான்களே.

(தேவதூ-வ-ம்.) அப்பா தூதர்களே நாம் இந்த விண்ணுலகத்தில் நடந்தசங்கதியாவும் மேருமலைச்சாரலி லிருக்கும் தேவர்களுக்கும் தேவேந்திரனுக்கும் தெரிவிப்போம் வருவீர்களப்பா தூதர்களே.

## தேவதூதர்கள் விருத்தம்

ஆயிரங்கண்ணுபோற்றி யசுரராலலைந்துவந்தோம்
சேயராம்நாங்கள்பட்ட சேதியையுரைப்போம்போற்றி.

(தேவதூத-வ-ம்.) போற்றி போற்றி இந்திரபூபா ராக்ஷதர்களால் பொன்னுலகம் பட்டபாட்டை தெரிவிக்கவந்தோம் கவனித்துக்கேழ்க்கவேண்டும் இந்திரபூபா.

(இந்-வ-ம்.) அப்பா தூதர்களே யாதுவிசேஷம் உரைப்பீர்களப்பா.

(தேவதூ-வ-ம்.) சுவாமி தேவரீர் பொன்னாட்டை நீங்கினபின்பு உங்கள்குமாரர் அரசுசெலுத்தி நேற்றியதினவரையில் எங்களைப்போற்றிவந்தனர் சூரன்குமாரன் பானுகோப னென்பவன் அளவற்ற ராக்ஷதப்படைகளைக் கூட்டிவந்து பொன்னுலகைமுற்றுகைபோட்டுக்கொண்டதை யறிந்த தமது குமாரர் கோபித்தவராய் தேவப்படைகளுடன் அயிராவதத்தின்மீதில் ஆரோகணித்து அகோரயுத்தங்களைசெய்தும் கடையில் சத்துருக்களுக்கிளைத்துத் தானும் விண்ணவர்களும் அவர்கள் தேவிமாருடன் பாதகன் சிறையி லடைக்கப்பட்டார்கள் அதல்லாமலும் பொன்னுலகத்தையும் தீக்கிறையாக்கிவிட்டார்கள் சுவாமி.

## இந்திரன் தரு.

இ-ம்-கரகரப்பிரியா-ஆதிதாளம்.

பல்லவி.

பாலகாபதைத்தாயோ பாவியால் ஆவிசோர. (பால)

அநுபல்லவி.

ஏலாதபோர்செய்து என்னைநினைந்தாயோ ஓ மகனே. (பால)

சரணம்.

அரசுசெய்திருப்பாயென் றகமகிழ்ந்திருந்தேனே அன்புள்ள
அன்புள்ளஅய்யனே ஆதரிப்போரெனைக்காணனே தென்புள்ள. ()
செங்கோலரசியற்றி சிறையிருக்கநேர்ந்ததோ சிருவனே
சிருவனேநற்றவப்புதல்வனே சின்னமடைந்தாயோ அருவனே. ()

## இந்திராணி கண்ணிகள்.

இ-ம்-நீலாம்புரி-ஜம்பைதாளம்.

எப்படிசகிப்பேன்மகன் இருந்திடச்சிறையிலீசா
கப்பிடத்துயரானனே கைலைவாசா
பாதகர்கைதனில்சிக்கி பதைத்திடச்செய்தாயோஈசா
சூதகருடனிருந்து சுந்தரேசா
பாலனைப்பார்ப்பதெப்போதோ பய்யரவணிந்தஈசா
பார்த்தெங்கள்குறையை தீர்ப்பாய்பாபநாசா.

(இந்-வ-ம்.) நாயகி நாம் இப்படிபுலம்புவதால் யாதோர்குறையும் தீரமாட்டாது பரமசிவத்தை தியானம்செய்து தவமிருந்தால் அவர்பிரசன்னமாகி நமது குறைகளை தீர்ப்பார் துயரப்படவேண்டாம் நாயகி.

(இந்-வ-ம்,) அப்படியே தவம்செய்வோம் நாயகா.

## இந்திரன் தரு.

இ-ம்-பைரவி-ரூபகதாளம்.

பல்லவி.

தருணம்வரத்தருணமீசா தர்க்காத்தருள்சர்வேசா. (தரு)

அநுபல்லவி.

மரணவாதையாகிநாங்கள் மயங்குறோமேவாரும்வாரும். (தரு)

சரணம்.

கருணைபொழியும்கைலைவாசா காலமிதுவேகார்ப்பாய்நேசா
தரணியில்துயராய்விஸ்வேசா தவிக்கிறோம்குறைதீர்பவநாசா. (தரு)
ஞானனந்தவாரியில்நாளும் நடனமிடும்நாதாகேளும்
நானுவிததுயரின்மாளும் நங்கள்வினையைதீர்த்தின்றாளும். (தரு)

## பரமசிவன் விருத்தம்.

விண்ணுலகாளும்வேந்தா வேணதோர்வரமளிக்க
மண்ணுலகதனில்வந்தேன் மகிழ்ந்திடக்கேட்டிடாயே.

(பர-வ-ம்.) என் அன்புள்ள விண்ணுலகாதிபதியே நீசெய்த தவத்திற்கு மெய்ச்சி சந்தோஷித்தேன் வேண்டியவரத்தைக்கேள் இந்திரா.

## இந்திரன் விருத்தம்.

இடிபெறஇயற்றும்சூரன் இனமெலாமொழித்துவுந்தன்
அடிசிரமீதிற்கொள்ள அநுக்கிரகம்செய்வீர்போற்றி.

(இந்-வ-ம்.) போற்றி போற்றி புனிதஞான போற்றி தீமையையே குடிகொண்டிருக்கின்ற சூரபத்மன் முதலிய அரசர்களைக் கொன்று எங்களுக்குள்ள துன்பத்தைநீக்கி யருளவேண்டும் புனிதஞான.

(பரம-வ-ம்.) மகவதியே யாம்பார்ப்பதியோடு கூடி ஒருகுமாரனைத்தருவோம் அவனால் வெற்றிபொரிந்திய சூரன்முதலிய அவுணர்களைகொன்று உங்களுடைய செல்வத்தை யுங்களுக்கே கொடுப்பான் வருந்தவேண்டா மிந்திரா.

(இந்-வ-ம்) தேவர்களே சூரன்கண்ணில்புலப்படாமல் இவடத்திலேயேயிருந்து தவம்செய்துக்கொண் டிருந்தால் பரமன் வாக்களித்தவண்ணம் குமாரனைத்தந்தபிறகு வெளிசெல்லலாம் தேவர்களே.

(தேவர்-வ-ம்.) அப்படியே இவ்விடமே யிருக்கலாம் தேவராஜனே.

## தேவர்கள் தரு.

இ-தேவகாந்தாரம்-ஆதிதாளம்.

பல்லவி.

சம்போசிவசங்கரா சமையம்கார் கிருபாகரா. (சம்)

அநுபல்லவி.

செம்பொன்னம்பலவவே சீர்மிகுமிறைவனே
சீவதயாபரனே சிவ சிவ சிவ சிவ. (சம்)

சரணம்.

நந்திகணத்தோர்முதல் நாடிடும்பொற்பாதா
நான்மறைதுதிபோதா நமசிவய சிவ. (சம்)

தெவிட்டாவானந்தவாழ்வே தீவினைதீர்க்கவே
திருவருள்செய்குவாய் ஜெய ஜெய ஜெய ஜெய. (சம்)
அண்டகோளங்களெல்லாம் ஆண்டிடுமாதிமூர்த்தி
அடியவரிடர்தீர்ப்பாய் அரகர அரகர. (சம்)

(இந்-வ-ம்) தேவர்களே சூரபத்மனால் நமக்கு நேரிட்டகொடியதுன்பங்களை பொருக்கமாட்டாமல் மேருமலைச்சாரலில் தவம் செய்தகாலத்தில் பரமசிவன்வந்து மலையிறைவன் புத்திரியாகிய பார்ப்பதியைக்கூடி சூரனைக்கொல்ல ஒருகுமாரனைத் தருவதாக வாக்களித்து வெகுகாலம்சென்றும் யாதொரு பரிகாரமும் உண்டாகாமையினால் யாவரும் கைலைக்கிச்சென்று இன்னமொருவிசை நமது கஷ்டங்களை விண்ணப்பம்செய்துக்கொள்வோம் வாரீர் தேவர்களே.

(தேவர்-வ-ம்.) தேவர்கோனே இப்பொழுதே செல்வோம் வருவீர் தேவர்கோனே.

### தேவேந்திரன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஏகதாளம்.

தேவர்காள்நாமும் தீர்ந்திடக்குறை
தாவியிப்போதே தழைக்கச்செல்லுவோம்

**தேவர்கள்.**

தேவர்கோனே ஏகுவோமே.

**விஷ்ணு.**

சூரபத்மனை துனைவிலொழிக்க சோராமலேநாம்சுறுக்காய்செல்லுவோம்.

**தேவர்கள்.**

தேவர்கோனே தகுமிதுயோசனே

**இந்திரன்.**

தரணியைவிட்டு தடைபடாதய்யன்
சரணடைகுவோம் சங்கடங்களேக.

**பிரமன்.**

அமரேசாஅதிநேசா அதற்கென்தடை
யமவாதைதீர்ந்திட ஏகுவோமே.

**தேவர்கள்.** **பிரமன்.**

ஏகமாய்க்கூடி. நலமிகப்பாடி.

**விஷ்ணு.** **தேவர்கள்.**

சீக்கிரமோடி. சிந்திப்போமவரிடம் நாடி.

## பிரமன் விருத்தம்.

நம்மிடசபையின்கண்ணே நயந்ததுசரிதானின்று
வெம்பிடாத்தூதுகொண்டு விரைவினிலேயனுப்பிச்
சம்புசதாசிவனிருக்கும் சமயத்தையறிந்துகொண்டால்
கம்மிலாதின்னேநாமும் கடிதினிற்செல்லலாமே

(பிர-வ-ம்.)தேவர்களே இந்திரன்முதலானவர்கள் யோசித்ததுபோல்போக யாதொருதடையுமில்லை சிவபெருமான்சமயத்தை இன்னதென்று முன்னே அரிந்துகொண்டால் நல்லதுயாரையனுப்புவது தேவர்களே.

## தேவர்கள் விருத்தம்.

ஆமிதுமெய்தானீரின் றன்புடனுறைத்தவாறே
தாமதமில்லாதெங்கள் சங்கத்திலொருவர்தம்மை
நேமித்துஅனுப்புவீரேல் நிமிடத்தில்அங்குசென்று
காமனைக்காய்ந்தோன்வேளை கண்டோடிவருகின்றோமே.

(தேவர்-வ-ம்.) தாமரைபீடத்தமர்ந்த பிரமதேவரே நீர்திருவாய்மலர்ந்ததுபோல் நீரேஎங்களில் எவர்களையாகிலும் நேமித்து அனுப்பினல் நிமிஷத்தில்போய் சாம்பசிவனுடைய சமயத்தையறிந்துவருகுறோம் பிரமதேவரே.

## பிர்மன் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-ஏகதாளம்.

நீர்போய்வாரீர் வாயுதேவரேநீர்
கோரினேனும்மையே குணமுடன்கைலை. (நீர்)
உந்தன்வல்லமையையெண்ணி எந்தனுல்சொல்லப்போகுமோ
சிந்தையில்மகிழ்வுகொண்டு விந்தையுடனேடி. (நீர்)

(பிர-வ-ம்.) வாயுதேவரே பூர்வத் தில்ஆதிசேஷனுக்கும்உமக்கும் வாதுநேர்ந்தகர்லத்தில் அவனுல் சூழப்பட்டிருந்த மகம்மேருவினது சிகரங்கள் ஆயிரத்துள் ஒருமூன்றை உம்முடைய வேகத்தினுல்பறித்து அஞ்சிவாடத்தக்கதாக சமுத்திரமத்தியி லெறிந்த உமது வல்லபத்தை தேவர்கள் மெச்சிருக்க இக்காலத்தில் நமது குறைகளை நிவாரணம்செய்துக்கொள்ளும்பொருட்டு விண்ணப்பம் பண்ணவேண்டுவதற்காக நீர் முந்தி திருக்கயிலாயம்போய் சிவபிரானிருக்கின்ற அவசரத்தினைத் தெரிந்துவர நீரேபாத்திவாளியாதலால் போய்வரவேண்டும் யாதுரைக்கின்றீர் வாயுதேவரே.

## வாயுதேவர் விருத்தம்.

மனமதுநடுங்குதய்யா மன்மதனெதிர்த்தகாலம்
சினமிகக்கொண்டன்னை சிவபிரானெறித்ததாலே.
அனமெனும்வாகனத்தின் அமர்ந்துவாழ்ந்தருளுமெங்கள்
மனவரேபோகேன்யானும் மன்னித்துரக்ஷிப்பீரே.

(வாயுதே-வ-ம்) பிரமதேவரே சாம்பசிவனிடத்தில் மன்மதன் பட்டபாடு தெரிந்தும்ரிங் எவர்களும் போகப்படாதயிடத்தில் என்னையனுப்புவதற்கொட்டேன் மன்னிக்கவேண்டும் மகாநுபாவா.

## பிரமதேவர் கண்ணிகள்.

இ-ம்-இந்துஸ்தான்-ரூபகதாளம்.

மறுக்காதீரெந்தன் சொல்மதிதலத்தல்
மகியில்வெகுபுண்யம் மாமிதுவே
தம்மையடுத்தோரை தாங்குவதே
தரணியில்மிகபுகழ் தருவதுவே
உம்மையல்லால்கதி யுற்றவர்யார்
உகந்துஎனக்கதை யுறைத்திடுவீர்.

(பிரமதே வ-ம்.) வாயுதேவரே எவ்விடத்தும் தடையின்றி உலவுகின்றவர் நீரொருவரல்லாமல் இச்சபையில் வேறொருவருமில்லை தேகிஎன்பவர்களுக்குத் தியாகம்கொடுத்துக் குறையைதீர்ப்பதும் தம்மையடுத்தோரைத் தாங்குவதுந்தானே பெருமைஆதலால் நீரே அவஸ்யம்போய்வரவேண்டும் வாயுதேவரே.

## வாயுதேவர் விருத்தம்.

எனக்கெனநேர்ந்திட்டாலும் எப்பழிவந்திட்டாலும்
மனக்குறைநீங்கயானே மகிழ்வுடனேகுவேனே.

(வாயுதே-வ-ம்.) பிரமதேவரே உம்முடைய ஆக்கினைப்படி எனக்கெதுநேர்ந்த போதிலும் உங்கள் மனக்குறை நீங்கும்படி போய்வருகின்றேன் பிரமதேவரே.

## வாயுதேவர் தரு.

இ-ம்-மோகனம்-ஆதிதாளம்

பல்லவி.

ஈசன்கைலைவாசனைக் கண்டிடமையில்வருவேன்
தாசன்னுனுமே தாட்டிகமதாய். (ஈசன்)

அநுபல்லவி.

நேசன்தங்காமல்நேராயோடியே நின்றிடாமலே. (ஈசன்)

சரணம்.

பார்ப்பவர்பதைத்திட பாங்குடன்பரந்துநான்
பக்குவமர்கவே இக்கணமேவி
பார்த்துவருவேனிதோ பாதகசூரர்கள்
பாதைகள் பரந்திட.(ஈசன்)

(வாயு-வ-ம்.) தேவர்களே இதோகயிலேயங்கிரிக்கிச் செல்கின்றேன்.

## நந்திதேவர் விருத்தம்.

ஆரடாபயலேநீதான் ஆங்காரங்கொண்டியிங்கு
வீரமாயென்னைத்தாண்டி வேகமாய்ப்போவதென்னே
சூரர்களெவருமில்லே சுருசுருப்புடனேநீயும்
தீரமாய்வந்தசேதி சீக்கிரமுறைத்திடாயே.

(நந்தி-வ-ம்) ஏ துஷட்டா கொஞ்சமுமஞ்சாமல் உலகங்களைக்காக்கத்தக்க கைலேயங்கிரியில் வீற்றிருக்கும் பரமசிவனுடைய காவல் இங்குண்டென்பது தெரியாதுவந்தவனாகிய நீயாரடா நில் துஷ்ட்டா.

## வாயுதேவர் தரு.

இ-ம்-சுருட்டி-ரூபகதாளம்.

பல்லவி.

கோபம்கொள்ளாதீ ரய்யனே
கோரிவந்ததையான் கொப்பெனவுறைப்பேன் (கோ)

சரணம்.

தாபங்கள்மூன்றுந் தணித்திடுந்தானுவே
சோபத்துடன்வந்தேன் சோதிக்காதினிமேலே
பாபிசூரபத்மன் பகரொணுகோரத்தால்
ஆபத்தைத்தீர்த்திட அடியேன்வந்ததாலே.(கோ)

தேவர்கள்யாவரும் தீராத்துயரங்கொண்
டாவலுடன்என்னை அனுப்பவந்தேனையா
சிவதயாபரன் சமயம்தெரிந்துயான்
சீக்கிரமேகவே சிறியேனுக்கருளையா.(கோ)

அந்தமுள்ளதேவர் ஆக்கினைக்கஞ்சியான்
அடைந்தேனிங்கு ஆராச்சாபம்வருமென்று
சிந்தையிலெண்ணி சொரூபத்தைமாற்றியே
சேயன்வாயுவந்து சிந்தித்தேன்மிகயின்று. (கோ)

(வாயுதே-வ-ம்.) சுவாமி மகாவிஷ்ணு பிரமதேவர் தேவேந்திரன்முதலானவர்க ளனைவரும் சூரபத்மனுக்குப் பயந்து மகம் மேருசாரலில் ஒளித்திருக்கின்றவர்கள் காளகண்ட மூர்த்தியினுடைய சந்நிதானத்திற்குவந்து தமதுகுறைகளை விண்ணப்பம்செய்துக்கொள்ள அதற்குமுன்னம் சிவபிரானிருக்கும் சமயத்தை துரிதமாய்த்தெரிந்துவர என்னை அநுப்ப தடுத்தால் சாபம்வருமென்றெண்ணி என்சுயரூபத்தைமாற்றி வாயுவாகிய யான் அந்தகோரத்தினால் உங்களைத்தெரியாமல் தாண்டினதை மன்னிக்கவேண்டும் சுவாமி.

(நந்தி-வ-ம்.) ஏ வாயுதேவனே உனக்குப்போக யிருந்தபிராணனை தந்தேன் இனி இங்குநிற்கவேண்டாம் சீக்கிரம் விலகுவாய் துஷ்ட்டா.

## வாயுதேவர் தரு.

இ-ம்-சாவேரி- தாளம்-ஆதி.

பல்லவி.

பிழைத்ததேபெரும்பாக்யம் பேயனேடினேன். (பிழை)

அநுபல்லவி.

அழைத்தால்வருமோயெந்த னுவியோனபின்பு
ஆரிடம்சொல்லுவேனுன் அடைந்தவருத்தமின்று. (பி)

சரணம்.

மெள்ளமந்தமாருத வடிவுடன்வெல்ல
வெள்ளியங்கிரியில் வேகமுடனேசெல்ல
துள்ளிஆலயத்துட் போம்போதுபொல்லா
கள்ளனேநில்லென்று கடுத்துறத்துசொல்ல
அந்தஇடத்தில்பார்க்கஎனை நந்திபெருமான்கேழ்க்கமிக
நொந்துகாலில்வீழ்ந்து நொடியினில்நான்பட்ட
விந்தையென்னசொல்வேன் வீணிலலைந்துகெட்டு. (பிழை)

(வாயுதே-வ-ம்.) ஐயாதேவர்களே கைலையங்கிரியில் நந்திதேவரால் படாதபாடுபட்டு பிராணனைபோக்கடித்துக் கொள்ளாமல் வந்தேன் இனி என்னால் ஒன்றும் முடியாதய்யா தேவர்களே.

## மகாவிஷ்ணு விருத்தம்

வலியினிற்சிறந்தோனை வாயுவுங்கயிலைசென்று
நலிவுகொண்டிங்குவந்து நடந்ததைசொல்லக்கேட்டோம்
பலதரம்பன்னிப்பார்த்தும் பார்ப்பதிமனோகரன்தான்
சலனமற்றிருக்குமார்க்கம் சடுதியில்தெரியச்செல்வோம்.

(மகாவி-வ-ம்.) தேவர்களே சிவபெருமானிருக்கும் நிலையை த்தெரிந்துவரும்படி யனுப்பினவாயுதேவன் சொன்னதைக்கேழ்க்கவருத்தமாயிருக்கின்றது இனி தாமதம்செய்யாமல் ஒருமித்துவெள்ளியங்கிரிக்கிச் செல்வோம் வாருங்கள் தேவர்களே.

## தேவர்கள் தரு

இ-ம்-இந்துஸ்தான்-தாளம்-ரூபகம்.

ஆர்தான்தீர்ப்பாரோ நமதாவலைக்கோரி
அறிகுவோமதையின்று அன்புடன்தேரி
சீர்புகழ்சூரன்செய்யும் தீமைநேராய்
பார்ப்பதிபாகன்முன் பகருவோம்சீராய். (ஆர்)

## தேவர்கள் விருத்தம்.

அய்யனேபோற்றிபோற்றி அவுணரால்பாடுபட்டு
நய்ந்துமேநாங்கள்வந்தோம் நந்திகேஸ்வரரேகேளீர்
பய்யரவணிந்தோன்பாதம் பணிந்தெங்கள்குறைகள்சொல்ல
துய்யனேவரவைச்சொல்லி துரிதமாயழைப்பிப்பீரே.

(தேவர்-வ-ம்.) போற்றி போற்றி நந்திஎம்பெருமானேபோற்றி நாங்கள் அவுணரால்படும்பாட்டை சகிக்கமுடியாமல் பரமனிடத்தில் பணிந்துமுறையிட்டுக் கொள்ளவந்தோம் எங்கள்வரவை கிருபாநிதிக்கித்தெரிவித்து அழைப்பிக்கும்படியான முயற்சி செய்யவேண்டும் சுவாமி.

(நந்தி-வ-ம்.) தேவர்களே யான் ஜடாமண்டலதாரியாகி முக்கணெம்பிரானை வணங்கிவிடைபெற்றுவருமளவும் நீங்கள் இவடம் விட்டசையாமல் இருப்பீர்கள் இதோ ஆலயத்துட்சென்று விடைபெற்றுவருகிறேன் தேவர்களே.

(தேவர்-வ-ம்.) அப்படியே காத்துக்கொண் டிருக்கிறோம் மகாதேவனே.

## நந்திதேவர் கண்ணி.

இ-ம்-எதுக்குலகாம்போதி-தாளம்-ரூபகம்.

புரமூன்றெரித்தோனே புழைக்கய்மாயுரித்தோனே
தரணிசெழிக்கதேவர் வும்மை தரிசிக்கவந்தார்கோனே
எல்லாம்வல்லவரே எந்தனெண்ணத்திலுள்ளோரே
நல்வரந்தருவீரே அவர்கள் நாடுதற்குறைப்பீரே
அடிமுடியில்லாத என்னய்யனே ஆதரிப்பீர்
கடையனுறைத்ததற்கு கருணைக்கடைக்கண்காட்டுவீரே. ()

(பரமசி-வ-ம்.) நந்தி தேவர்களனைவரையும் அழைத்துவரக் கடவாய்.

(நந்தி-வ-ம்.) நமஸ்கரிக்கின்றேன் பரமயோகி இதோ அழைத்துவருகின்றேன் சுவாமி.

(நந்தி-வ-ம்.) தேவர்களே வரும்படி உத்திரவு கடாக்ஷித்திருக்கிறார் வாருங்கள்.

(தேவர்-வ-ம்.) மகாசந்தோஷம் மகானுபாவா வருவீர்செல்வோம்.

## தேவர்கள் தரு.

இ-ம்-கேதாரம்-தாளம்-ஏகம்.

பல்லவி.

உந்தன்பெருமைப்புகழ எங்கள்தரமோ உந்தன். (உந்)

அநுபல்லவி.

முந்திமுந்திவந்த முக்கனிரசமே
மந்தகாசவா சாமகோசரமே. (உந்)

சரணம்.

சத்திசிவமாகவும் சராசரமும்
சஞ்சரித்திடு மாயமும்
சுத்தசயிதன்ய சொரூபானந்தமே
வித்தைமுத்திதரும் விவேகானந்தமே. (உந்)

மெத்தவருந்தினோமய்யா பர்விசூரனால்
சித்தங்கலங்கினோ மையா
அத்தனேஅகில மனைத்தையுமாள்வோனே
நித்யனேகர்த்தனே நின்மலநாதனே. (உந்)

நாமரூபமில்லாத நாயகனாக
நம்புமடியார் மீது

சேமஅருளைத்தந்து ஜெகந்தனிலேநடிக்கும்
செல்வனேஉம்பர்கள் தேடிடுமன்பனே. (உந)

## பரமசிவன் விருத்தம்.

ஆவலாயிங்குவந்த அன்புள்ளதேவர்காளுங்
கேவலமானசிந்தை கெடிபெறஅறிந்தேனின்றே
தீவரம்வரமேகேட்டால் தீவினையொழித்துமேதான்
தாவிலாத்தவம்பலிக்கத் தடையிலாதருள்செய்வேனே.

(பரமசி-வ-ம்.) தேவர்களே நீங்கள் மிகவும் நொந்து மனம் வாடினீர்கள் ஆதலாலித்தருணத்தில் உங்களுக்கு வரங்கள் ஏதேனுந்தர விருப்புற்றனம் வேண்டியதை கேழ்க்கக் கடவீர்கள் தேவர்களே.

## தேவர்கள் விருத்தம்.

அனுதினம்அவுணராலே அடைந்திடும்கஷ்டம்நீங்க
பனிமதிசூடும்நாதா பலமுறைவுரைத்தும்எங்கள்
மனமுறுதுயரேகாமை வந்தனம்பின்னுமின்றே
கனமுளபுத்திரன்பெற்றுக் கவலையைபோக்குவீரே.

(தேவர்-வ-ம்.) ஜடாமண்டல தாரியாகிய எங்களரசே அவுணவீரரால் படாதபாடுகள்பட்டு பலமுறைதெரிவித்தும் கிருபை நோக்காதிருந்து இப்போது கருணைவழிகாடும் கடவுளே அவ்வருத்தங்களைப்போக்கி ஆள்வதுடன் பார்ப்பதிதேவியாரைக்கூடி திருக்குமாரனைத் தருவதாய் வாக்களித்தவண்ணம் தரவேண்டும் ஜெயபரமேஸ்வரா.

## பரமசிவன் தரு.

இ-ம்-பியாகடை-தாளம்-ரூபகம்

பல்லவி.

ஆதரித்தேன் அஞ்சவேண்டாமினி. (ஆதரித்தேன்)

அநுபல்லவி.

தீதுள்ளவுணர்கள் தீரமொழித்து
வாதில்லாமலே வாழவுலகில். (ஆதரித்தேன்)

சரணம்.

பார்த்துப்பார்த்துக் களித்தானந்தமேலிட
பாலனைப்பார் புகழ்பெறுவேன்
கார்க்கவுலகங்கள் பூர்க்கமிகவுளம்

கனிவுடன்கண்ய பாய்த்தருவேன்
பாலனால்விடுவீர்பயமே பகர்ந்ததுஇனிமேல்நலமே
ஏனும்ராக்ஷதகுலமே இசையாதினிமேல்தினமே.(ஆதரித்)

(பொது-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே உலகமெங்கும் கிருபாநோக்கம் வைத்தாலும் தயாநிதியானவர் ஒருமுகமாயிருப்பவர் ஆறுமுகமாகப்போகிற அதிசயம்காண்பீர்கள் சபையோர்களே.

## பொது தரு.

இ-ம்-பியாகடை-தாளம்-ரூபகம்.

பல்லவி.

சாம்பசிவசங்கரன் சமயங்களறிந்து
சண்முகமானாரே இதோநேரே. (சாம்)

அநுபல்லவி.

பாம்பணையான்முதலோர் பார்த்துகளிக்கவேண்டி
பாம்பணிந்தபரமன் பழயகோலமாகியே.(சாம்)

சரணம்.

திசாதிசைகளெங்கும் திக்குவிஜயம்பண்ணும்
நிசாசரர்களை நீற்றிடக்கொண்ணும்
வசிக்காதினிசெய்து வான்புவிவாழும்வண்ணம்
இச்சைமனதில்கொண்டு என்றும்நிலைஎண்ணும்
ஆதியும்அண்டங்க ளாளும்
சோதியும் அன்பரைக் காக்கும்
அய்யன்கிருபையினு லருவமுருவமாய்
அணைத்திடன்பரை அநுக்கிரகமாய்
நுதலின்விழிகடோரும் நோக்கியனற்பொரி
நிதமும்வாழவரும் நின்றமைத்துசரியை
கிரியையோகங்கள் கீழ்ப்படாமலே
பரிவாய்பார்த்துமே பாங்காய்மென்மேலே. (சாம்)

(பொது-வ-ம்,) கேளுங்கள் சபையோர்களே ஒருமுகமாயிருந்த பரமசிவன் ஆறுமுகமாகி நெற்றிவிழியினுத்த அனற்பொரியால் தேவர்களெல்லாம் ஆதிகாலத்தில் ஆலகாலவிஷத்திற்கு தாளாமலோடினதுபோல் அதிகதீக்ஷண்யத்தினால் தேவர்கள் திகைக்கவும் அருகிலிருந்தபரமேஸ்வரி அரண்மனைக்கி ஏகவும் சமுத்திரம் ஆருகூவதடாகங்கள் ஜலம் குறையவும் உலாவிக்கொண்டிருப்பதை அரிவீர்கள் கனவான்களே.

## பரமேஸ்வரி தரு.

இ-ம்-இந்துஸ்தான்-தாளம்-ரூபகம்.

அனலும்வீசுதேஎங்கும்மிக அங்கம்வாடிசோருதே
நினைவுதடுமாருதிப்போ நிலையிருந்துபோக அப்போ
நின்றதேவர்களும் நிலைகுலைந்தோடிட
நீங்காவருத்தமும் நேர்ந்ததேவாடிட.(அன)

## பரமேஸ்வரி விருத்தம்.

உலகெலாமுணரநின்று உண்மையைவிளக்கவந்த
நலமிகுமெந்தனுதர் நாடியேசிருட்டிசெய்து
அலறவேயண்டபிண்டம் அனற்பொறியாறையுந்தான்
உலவிடச்செய்துபார்க்கும் உன்னதமென்னசொல்வேன்.

(பரமேஸ்-வ-ம்.) ஆ! ஆ! இப்பொழுது வீசப்பட்ட அனலின்மகிமையால் ஜெகமெங்கும் வாடிவருந்த இப்பேர்ப்பட்ட சிருட்டியைசெய்தகாரணத்தை சொல்ல எனக்கே தீக்ஷண்யத்தைத் தருகின்றது இங்கிருந்தால் இன்னும் என்னபாடுபடவேண்டுமோ தெரியவில்லை நாம் அரண்மனைக்குச் செல்வோம்.

## தேவர்கள் தரு.

இ-ம்-நாடகுறிஞ்சி-தாளம்-ரூபகம்.

பல்லவி.

எப்படிசகிப்போமீசா இனிநாங்கள் எப்படிசகிப்போமீசா. (எ)

அநுபல்லவி.

தப்பிப்பிழைக்கப்படாது தகிக்குமனலாய்குறித்தபொறியால்.(எ)

சரணம்.

ஆலகாலம்போல்கோல ஜுவாலையாலே
அலையுதேஞாலம் குலையுதேதனுலே
ஓலமிடாமலே ஜாலம்செய்யாமலே
காலமரிந்து காராவிட்டாலினிமேலே.(எப்)

எங்குந்தங்காம லோங்கிஓடுதே
பங்கம்செய்பொல்லா சிங்கம்போல்நாடுதே
திங்களணியும் மங்களாஜாடுதே
தேங்கிவுடல் வீங்கிவாடுதே.(எப்)

(தேவர்-வ-ம்.) பரமேஸ்வரா கொடியபாதகராகிய அசுரரால் வருந்துகின்ற துன்பங்களைப்போக்கி ஆள்வதற்காக ஒருபுத்திரனை கடாக்ஷித்து ரக்ஷிக்கக்கேட்டதற்கு அதற்குமாராக அளவுபடாத அனற்பொரியினைத்தந்து அதனால் அதிக ஜுவாலைவீச அந்தவெப்பமானது எந்தவிடங்களிலும் பரந்து வாட்டுவதினால் பிராணிகள் நாசப்படுகின்றன தேவரீர்தயவுசெய்து வேகத்தைத் தணிக்கவேண்டும் பரமேஸ்வரா.

## பரமசிவன் விருத்தம்.

பரமனுனிருக்கநீங்கள் பயப்படவேண்டாம்நேர்நல்
சூரவெனவுங்களுக்குக் கோரியவெல்லாமீவேன்
உரமுடனளித்தவாக்கை உண்மையாய்நம்புவீர்கள்
விரைவினி லுருவைமாற்றி வேகத்தையடக்குவேனே.

(பரம-வ-ம்.) தேவர்களே பயப்படவேண்டாம் இப்போதிருக்கும் உருவைமாற்றி ஒருருவாகி கோரியதெல்லாம்தந்து பொறியின்வேகத்தை அடக்குறேன் தேவர்களே.

(பொது-வ-ம்.) கேளுங்கள் சபையோர்களே ஆறுமுகமாயிருந்த பரமசிவன் அனற்பொறிகளை உற்பித்து ஓர்முகமாகி தேவர்களுடைய இடுக்கங்களைப்போக்கி அனலின்வேகத்தையும் தணிக்கும் கருணையைக்காண்பீர்கள் சபையோர்களே.

## பொது தரு.

இ-ம்--இந்துஸ்தான்-தாளம்-ஏகம்.

ஏகமுகமானரே எங்கும்ஜொலிக்க
வேகமாகபோகயோக ஞானதீபகோனுதீபன். (ஏ)
சுந்தரமுகமுடனே சூலங்கையினில்பிடித்து
சந்திரனைதலையில் தரித்துமான்மழுவிரித்து. (ஏ)

(பர-வ-ம்.) அண்டரண்டங்களையும் அலைத்தழிக்கும் அனற்பொரிகளே ஓடிவாருங்கள்.

## பரமசிவன் விருத்தம்.

சிரமதுபணிந்துநிற்கும் சிகியொடுசலனேகேளீர்
பரபரப்புடனேஇந்த பகுபொறிசிரசில்தாங்கி
வரநதிதன்னில்சேர்த்தால் வணக்கமாயவளேகொண்டு
சரவணப்பொய்கைக்கேகி சாங்கமாய்விடுவாள்காணீர்.

(பரமசி-வ-ம்) ஏ வாயுவே அக்கினியே நீங்களிருவரும் இந்த அனற்பொரிகளை பயபக்தியுடன் சிரசில்தாங்கிக் கொண்டுபோய் கெங்கையில்விட்டால் கெங்கைசரவணப் பொய்கையில் சேர்த்து விடுவாள் சீக்கிரம் செல்வீர்கள்.

## அக்கினிதேவர் வாயுதேவர் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-அடதாளசாப்பு

மனமதுநடுங்குதய்யா மடங்கலைக்காணவே. (ம)

நினைக்கநினைக்க நெடிதுயிர்வாடி
நிகரில்லாவலுமையும் நெகிழ்த்ததுவீடி
அனந்தனேநீரறியா ததிசயங்களுண்டோ
அடிமைகள் தாங்கிஏக. (மன)

பாலவிழிப்பொறியால்நாங்கள் பதைபதைக்கின்றோமே
ஆலகாலவிஷம்போல் அதிசுடரைக்கண்ட
மாலயன்தேவரும் மதிமயங்கிக்கொண்ட
கோலக்குறையையும் குலைவையுமென்சொல்வோம்
சீலனே சிந்தித்து (மன)

(வாயு-அக்கினிதேவ-வ-ம்.) கெங்காதரக் கடவுளே தேவரீரிடத்தில் உதித்தபொறிகளின் மகிமைகளை நினைக்குமிடத்தில் மனம்நடுங்குகின்றது அப்பேர்ப்பட்ட அப்பொறிகளை அடியோங்கள் சிரசிற்றாங்கிக்கொண்டுபோக எங்களால் தரமோ இதைதேவரீர் அரியாததுண்டோ பாபங்களைப்போக்கும் பரமேஸ்வரா.

(பரமசி-வ-ம்.) ஏ வாயுவே அக்கினியே ஒருநொடிப்போதில் இந்தவுலகங்கள் முற்றிலும் பரந்து நெருங்கிய இப்பொரிகளை சுமந்துகொண்டுபோய் கெங்கையில் விடுவதற்கு உங்களிருவருக்கும் வலிமையுண்டாக ஆசிர்வதித்தனம் அப்படிகெங்கையில் விட்டமாத்திரத்தில் அவள் சரவணப்பொய்கையில் சேர்ப்பிப்பாள் பிறகுவலியிற் சிறந்தகுமாரனுக வுருக்கொண்டு வெளிவந்து மகதயிஸ்வரியங்களைப்பெற்று உலகங்களை அலைத்திருக்கின்ற சூரபதுமனை குலநாசம்செய்வான் இனிமேற்சங்கையின்றி பலரும்போய் வருவீர்கள் தேவர்களே.

## தேவர்கள் கண்ணி.

இ-ம்-தேசிகதோடி-தாளம்-ரூபகம்.

ஆதிதேவனேயுந்தன் அருமையின்திரமை
ஆதிசேஷனுலுஞ்சொல்ல அருமோபெருமை

சுயம்பிரகாசனே அன்பர்சூழும்நேசனே
ஜெயமேவாசனேஎவர்க்கும் செய்யுமீசனே
கோரியவண்ணம்எண்ணி குறையைதீர்த்தோனே
காரணகாரியமாகி கார்த்துநிற்போனே
துஷ்ட்டசூரனுல்படும் துயரைப்போக்கினேம்
கஷ்ட்டம்யாவும்கடந்து நின்றுகளிக்கலாயினேம்
தாயகமாகிஎம்மை தாங்கினீர்நீரும்
போய்வருகிறேம் பெரும் புண்யனேகாரும்.

(தேவர்-வ-ம்.) சுயஞ்சோதிக்கடலே உங்கள்தயவால் எல்லா சம்பத்தையு மடைந்தோம் தங்களுத்திரவுபடி அனற்பொறிகளை எடுத்தேகும் வாயு அக்னிதேவர்களுடன் நாங்களும் போய்வரு கின்றேம் சுயஞ்சோதிக்கடலே.

## வாயுதேவர் தரு.

இ-ம்--மோகனம்-தாளம்-ஆதி.

அடாதராக்ஷதர் படாதபாடு
படுவாரென்றும் கெடுவாரென்றும்
கெடிபெறவுலகில் குடிகொண்டாளும்
கொடியசூரன் இடிகொண்டோடவும்
எடுத்தவிரதம் கெடுத்தஅவுணரை
அடுத்துவென்*று கடுத்துகொல்லவும்
திடமுடனிப்போ மடமடவென்று
எடாதனற்பொறி எடுத்தேன்எடுத்தேன்
விடையன்சொல்போல் முடிமேல்பூண்டேன்
நடையும்கொண்டு துடியாய்செல்வேன்.

(வாயுதே-வ-ம்.) தேவர்களே நமது சங்கடங்கள் ஒழிய எடுக்கக்கூடாத அனற்பொறிகளை சிரசில்தாங்கினேன் சீக்கிரம்செல் வோம் வருவீர்கள் தேவர்களே.

## வாயுதேவர் விருத்தம்.

சிரசினிலெடுத்துவந்த சிறந்தநற்பொறிகள்செய்யும்
தெரிவரும்துயரைஎன்னல் செப்பிடவொண்ணுதய்யா
உரிமைகொள்ளக்னிதேவா உற்றஎன்துயரந்தன்னை
பரிகரித்திடுவாய்நீதான் பரித்திந்தபொரிகள்தானே.

(வாயுதே-வ-ம்.) ஐயா அக்னிதேவரே என்சிரசில்வைத்திருக்கும் அனற்பொரிகளின் வேகத்தால் தலைவெந்து படும்சித்திரவதையை என்னால் சொல்லமுடியவில்லை பரமசிவ னுத்திரவுபடி நீர் இவைகளை சிரசில் தாங்கிக்கொள்ள வேண்டுமையா அக்னிதேவரே.

## அக்கினிதேவர் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-தாளம்-ரூபகம்.

வாதைபடவேண்டாம் வாயுதேவரேயுன்
தீதைவிலக்கிடுவேன் இப்போதே
ஆதரவுசெய்வேன் அட்டியில்லர்மலே
அனற்பொறி களைத்தாங்கி
மனமகிழ்வடையவே ஓங்கி.(வாதை)

(அக்னி-வ-ம்.) வாயுதேவரே நீர்வாதைபடாமல் அனற்பொறிகளை தாங்கிக்கொள்ளுகிறேன் என் சிரமேல் வைத்து விடுவீர் வாயுதேவரே.

## அக்கினிதேவர் விருத்தம்.

தீப்பொறிசுடுதலாலே தீய்ந்ததுசீரமெல்லாம்
மாப்பணியணிந்தனுதா மங்கையோர்பாகாவுன்றன்
தூப்பதம்பணிந்தேனென்னை சுட்டிடாதிருக்கயின்றே
காப்பருங்கங்கைசேர்க்கக் கருணைசெய்தருளுவாயே.

(அக்னி-வ-ம்.) ஒ கைலாசவாசா யான்படும் கஷ்டத்தைப் பார்க்க வுனக்கழகாகுமா துரிதமாய் கங்கையில் பொறிகளைசேர்க்கும்படி திருக்கருணைசெய்வாய் கைலாசவாசா.

## அக்னிதேவர் கண்ணி.

இ-ம்-புன்னகவராளி-தாளம்-ஆதி.

ஒப்பிலாதஅனலுமென்னை கப்புதென்னசெய்வேன்
அப்பனேநீஎப்படியும் தப்பிடக்காருய்வேன்
ஏதுசெய்வேன் ஏங்குதுளம் எப்படிசகிப்பேன்
பேதைமுறைக்கிரங்கிக்கார்த்தால் பேயன்பிழைத்திருப்பேன்
உன்னையல்லால்ஒருவரில்லை உற்றதுணைநீயே
தன்னையறிந்தின்பமுறும் தரணிக்கெல்லாந்தாயே.

## அக்கினிதேவர் விருத்தம்.

விடமுண்டநீலகண்டன் விதிப்படிவழியைநோக்கி
கடிதினிலோடிவந்து கங்கையைக்கண்ணால்கண்டோம்
திடமுடனூற்றிலேதான் தீப்பொறியாறும்விட்டேன்
நடந்திடுமார்க்கமேதோ நாதர்காளறிந்திடீரே.

(அக்னி-வ-ம்) ஐயா தேவர்களே கடவுளிட்ட ஆக்கினைப்போல் நாம் துரிதமாய்வந்து கங்கையைக்கண்டு அதில் அனற்பொரிகளை யான்விட்டதையும் கண்டீர்கள் இனிநடக்கும் மார்க்கங்களை யோசிப்பீர்கள் தேவர்களே.

## கங்கை தரு.

இ-ம்-சங்கராபரணம்-தாளம்-ஆதி.

பல்லவி.

ஆ ஆ ஈதென்னமாயம் ஆவிசோருதனல்மிஞ்சியே. (ஆ ஆ)

அநுபல்லவி.

ஆரிட்டசாபத்தால் அடைந்தகெதியிது
தேரித்தெளிகுவோம் தேவனைசிந்தித்து. (ஆ ஆ)

சரணம்.

அங்கம்வரளவே யார்செய்தசதியோ
மங்கைபாகத்தோன் மகிழ்ந்ததிவ்விதியோ. (ஆ ஆ)

எந்தவேளையிலும் இந்தவிதிபோலே
வந்துநேர்ந்ததில்லை விந்தையிதுபோலே (ஆ ஆ)

உற்றுப்பார்க்கையி லும்பருக்கிறைவனால்
முற்றும்நேர்ந்ததே முடிவதென்னஎன்னால். (ஆ ஆ)

## கங்கை விருத்தம்.

பரமன்கட்டளையினாலே பாக்கியமளிக்கவந்த
வரமுள்ளவடவைநோக்கி வரிசையாய்எந்திளந்தன்
கரமென்னுமலைகளாலே கனிவுடன்கட்டிக்கார்த்து
சரவணப்பொய்கைமேவி சாங்கமாய்சேர்ப்பிப்பேனே.

(கங்கை-வ-ம்.) ஓ ! ஓ ! இதுகள் பரமன்கட்டளையால் வந்ததாகத்தெரிகிறது ஆதலாலென்ன கஷ்டமிருந்தபோதிலும் சகித்து அதிகவேகங்கொண்டு அலைகளென்னும் கரங்களினால் தாங்கி தாலாட்டி சரவணப்பொய்கையில்சேர்த்துவிடுவோம்.

## கங்கை தரு.

இ-ம்-புன்னுகவராளி-தாளம்-ஏகம்.

சீராகசெல்வேன் சரவணமேபுகழ்பெரும்
பேர்பெற்றதேவர்கள் பின்பற்றிவரவும்
பிரியமாயெவர்களும் பேசிடும்உரவும்
அருமறைமுனிவர்கள் ஆசிகள்கூறியே
வருந்திடாதிமையவர் வாழ்த்திஜெயங்கோரியே
வேதந்துதித்திட விஞ்ஞையர்பாடிட
நாதமுழங்கிட நல்விருதுபிடித்திட
இத்தனைவைபவம் இலங்கமுன்பாகவே
உத்தமரைஏந்தியே உன்னதமாகவே. (சீராக)

(கங்கை-வ-ம்.) நாம் இப்பொழுது சரவணப் பொய்கையில் பரமன்கட்டளையால்வந்த அனற்பொறிகளை சேர்த்து விட்டோம் இனி நமதிருப்பிடம் செல்வோம்.

## தேவர்களி லொருவர் தரு.

இ-ம்-நாதநாமக்கிரியை-தாளம்-ஏகம்.

பல்லவி.

அதிசயமென்னசொல்வேன் ஆ ஆ சரவணப்பொய்கையின்.(அதி)

சரணம்.

புதுமையாயிந்த பொய்கைக்கரையில்
பொருந்திதருக்கள் புகழும்வில்லமும்
புன்னைக்கொன்றை பொலிந்திடுமழகும்
மன்மதபாணம் மல்லிகைமுல்லையும்
மருவுகொழுந்து மனமகிழ்ச்சியாய்
திருவுள்ரோஜா தினமும்புகழ்ச்சியாய்
மாதர்கள்நாடும் மனோரஞ்சிதம்
ஜாதிசெண்பகம் சம்பங்குசிதம்
கதிர்பச்சையுடன் கனசாமந்தியும்
மிதமில்லாமலே மிகயிருவாக்ஷியும்
குருவேர்வாசம் குணமாய்வீசும்
அருகிற்சென்றால் அதிகம்நேசம். (அதி)

ஜெலத்திலிருக்கும் செந்தாமறையும்
விலகாமச்சம் வெண்டாமறையும்
நிகரில்லாத நீலோற்பலங்கள்
ஜெகம்புகழ்நல்ல செங்கழுநீர்கள்
அல்லலொழிக்கு மாம்பனுமல்லிகள்
மெல்லசெல்லவும் மேன்படுபக்ஷிகள்
அதினுடன்கூட ஆறுமாமுகமாய்
அன்பரைக்காக்க ஆரிருகரமாய்
உருவைப்பெற்று உன்னதமாக
முருகக்கடவுள் முனைந்திருப்பதை
பார்க்கப்பார்க்கப் பிரம்மானந்தம்
நேர்ந்திடுமிவ்வித நேத்ரானந்தம். (அதி)

(தேவர்-வ-ம்.) மாயவா நாம் இந்த பொய்கைக் கரையிலேயே இருந்துகொண்டு இவ்விதவைபவங்களை பெற்றுவிளங்குகின்ற பாலசுப்பிரமண்யருக்கு பால்கொடுக்க கார்த்திகை பெண்களை வரவழைத்து திட்டம்செய்வீர் மாயவா.

(மகாவி-வ-ம்.) அப்படியே செய்விக்கின்றேன் தேவர்களே.

## மகாவிஷ்ணு விருத்தம்.

சீர்பெறுசிவத்துதித்த தீப்பொறிமகவாய்வந்து
பார்புகழ்சரவணத்தில் பண்பதாய்விளங்கக்கண்டோம்
கார்தருகுழலார்ந்தோங்கும் கார்த்திகைப்பெண்காள்நீங்கள்
ஏர்தருமுலைப்பாலீய இத்ததிவருகுவீரே.

(மகாவி-வ-ம்) ஓ கார்த்திகைப்பெண்களே சிவபெருமானிடமிருந்து உதித்த அனற்பொறிகள் சரவணப்பொய்கையில் குழந்தைவடிவாய் விளங்கி இருப்பதால் பால்கொடுத்துவளர்க்க விரைவாய் ஓடிவருவீர்கள் கார்த்திகைப் பெண்களே.

## மகாவிஷ்ணு தரு.

இ-ம்-காம்போதி-தாளம்-சாப்பு.

பல்லவி.

ஓடிவருவீர்களே உத்தமனத்தினைப்பெற்ற
உன்னிதக் கன்னியர்களே. (ஓடி)

சரணம்.

ஆடிப்பரந்துநல் லானந்தங்கொண்டுமிக
வேடிக்கையாகவெகு விரைவினில்வருவீர்
நாடியகருத்தைஎல்லாம் நாங்களினிமுடித்திட
தேடியேகார்த்திகைப்பெண்காள் தியங்காதிப்போதேநீங்கள். (ஓ)

சேனைத்தலைவருடன் வானைக்கட்டிவாழும்
தானவர்செய்திடும் வூனங்களாலே
மானமழிந்துமெத்த ஈனத்தொழில்புரிந்து
ஊனமடைந்துதன்ம தானமிழைந்தோமின்று. (ஓ)

இகமும்பரமும்என்றும் இனிதுவிளங்கிட
பகவானருளால்வந்த பாலனுக்கும்பால்
அகமகிழஅளித்து ஆருயிர்ஓங்கிட
புகழ்பெறும்நல்லதவ புண்ணியவதிகளே. (ஓ)

(மகாவி-வ-ம்) ஓ கார்த்திகைப்பெண்களே எங்கள் குறையை நீக்கிக்கொள்வதற்கு சரவணப்பொய்கையி லிருக்கும் குழந்தை வேலனுக்கு பால்கொடுக்க வருவீர்கள் கார்த்திகைப் பெண்களே.

## கார்த்திகைப்பெண்கள் விருத்தம்.

பஞ்சவாயுதனேபோற்றி பாரளந்தவனேபோற்றி
கஞ்சம்நேர்தாளாபோற்றி காயாம்பூவண்ணபோற்றி
தஞ்சமாயுனையடைந்தோம் தாமமார்புயனேபோற்றி
செஞ்சவேளமையழைத்த செயலினையுரைப்பாய்போற்றி.

(கார்த்தி வ-ம்.) பகிமைபொருந்திய மாதவா எங்களையாது காரியமாய் வரவழைத்தீர் அதனைத்தெரிவிக்கவேண்டும் மாதவா.

## மகாவிஷ்ணு விருத்தம்.

கார்த்திகைப்பெண்களேநான் கருத்துடன்சொல்வேன்எட்டு
மூர்த்தமாய்விளங்குமய்யன் முருகனைஇனிதிற்பெற்று
பார்த்திடவுலகில்யாரும் பயில்தரச்செய்தலாலே
தீர்த்திடப்பசியைநீங்கள் தீங்கிலாதனம்பாலீவீர்.

(மகாவி வ-ம்.) பெண்களே சிவபெருமானிடத்தி லுதித்த குழந்தைகள் இந்தசரவணப் பொய்கையில் வீற்றிருக்கின்றனர் அவர்களுக்கு உங்கள் கொங்கைப்பாலை உண்ணும்படி கொடுத்து அன்பாகப்போற்றிவரக் கடவீர்கள் பெண்களே.

## கார்த்திகைபெண்கள் தரு.

இ-ம்-சாம்போதி-தாளம்-ரூபகம்

பல்லவி.

ஆக்கினைப்படியே அளிப்போம்பாலை இப்படியே. (ஆக்)

அநுபல்லவி.

பாக்கியமிதுபக்ஷமுடனே பரிவாய்ப்பாலை. (ஆக்)

சரணம்.

அய்யன்களித்திட ஆனந்தமேலிட
ஆதரித்திடுவோம் அமுர்தமளித்து
அச்சுதனேமெச்சும்படி இச்சையாக (ஆக்)

(கார்த்தி வ-ம்.) மாதவாஉங்களுத்திரவுபடியே எங்கள்பாலை க்கொடுத்து அதிகமேன்மையாய் பாராட்டி பாதுகாத்து வருகின் றோம் மாதவா.

## கார்த்திகைபெண் விருத்தம்.

அரனிடத்துதித்துவந்த அய்யனேயின்றுநாங்கள்
பரிவுகொண்டுனக்குண்டாகும் பசிதனைப்போக்கவந்தோம்
கிரிநிகரெங்கள்கொங்கை கிளர்தருபாலைநீயும்
பிரியமாயினிதினுண்டு பிறங்கிடவருகுவாயே.

(கார்த்-வ-ம்.) அரனிடத் துதித்துவந்த அய்யனே பசித்திரு க்கின்றீர் அமுதுண்ணவாரும் காக்கவந்த கருணாநிதியே.

## கார்த்திகைப்பெண் தரு.

இ-ம்-மூகாரி-தாளம்-ஏகம்.

பல்லவி.

அய்யனேவாருமையாநீரும் அமுதுண்ணுபசிதீரும். (அய்)

சரணம்.

மெய்யனேஎந்தனை மேன்படப்பண்ண
மேவுவீரிங்கனம் மீறிடும்பாலுண்ண
மேலான நல்பாலனே
மேதினியெங்கும் மிகுந்திடும் சீலனே. (அய்)

அருமறைதுதித்திட ஆறுமுகந்துலங்க
ஆரிருகரமுடன் அன்பர்களிலங்க
அவதாரம்செய்த உபகாரம்
ஆரறிவாருந்தன் அதிசயவீரம். (அய்)

(கார்த்-வ-ம்.) ஆ ஆ அடியம்மா என்ன ஆச்சர்யம் என்ன புதுமை சண்முகங்களைப்பெற்று ஒருதோற்றமாகக் காட்டியவர் இப்பொழுது ஆறுகுழந்தைகளாக நிற்கின்ற அழகும் இவர்களுடைய மகிமைகளையும் நம்மால் ஒன்றுஞ்சொல்ல முடியவில்லையே அம்மா.

(கார்-மற்ரொ-வ-ம்.) அடி அதற்கென்னதடை இப்பேர்ப்பட்ட மகிமை யுடையவரை நாம் எப்பொழுதாகிலும் கண்டதுண்டா.

(கார்-மற்ரொ-வ-ம்) அடியம்மா அவர்சாக்ஷாத் ஜெகதீசனல்லாது வேரல்லடி.

(கார்-மற்ரொ-வ-ம்.) ஆமாண்டி அப்படியல்லாவிட்டால் இப்படி அழகானசொரூபம் எடுக்கமுடியுமா.

(கார்-மற்ரொ-வ-ம்.) அடி அப்படி எடுத்தாலும் ஒருமுகமாயிருந்தவர் தனித்தனியாக ஆறுமுகத்தோடும் ஆறுகுழந்தைகளாக அவதரித்தது ஆச்சரியமே.

(கார்-மற்ரொ-வ-ம்.) அதற்கென்னதடை அம்மா இப்பேர்ப்பட்டவர் எப்படியும் அந்த சூரபத்மனைசம்மாரம் செய்துவிடுவார் தடையில்லை யம்மா.

## கார்த்திகைப்பெண்கள் தரு.

இ-ம்-இந்துஸ்தான்-தாளம்-சாப்பு.

பல்லவி.

ஆருருவான அதிசயத்தை அரிந்துசொல்லிடப்போமோயித்தை.

அநுபல்லவி.

ஒருருவாய்வந்து ஓங்கும்படிநன்று
வேருருவாக வெளிவந்ததின்று. (ஆருரு)

சரணம்.

ஒருவருக்கொருவராக ஒத்துநின்றுபால்கொடுக்க
நாரும்பூவும்போலேநாமும் நாடியே இசைந்திருக்க
பரிவாய்பார்க்கப் பரமானந்தம்
பலித்திடவே ஆ ! ஆ ! ஆ !

பரமன்வந்தார் நேர் நேர் நேர்
பார்த்திடவே சீர் சீர் சீர். (ஆருரு)

(கார்த்-வ-ம்.) எங்களை ஆளவந்த குழந்தைகாள் உங்களைப் பார்க்க தேகம்பூரித்து கொங்கைகள்குதூகுலித்து பாலதிகமாக சுரப்பதை உண்டுபசியார வருவீர்களப்பா.

## கார்த்திகைப்பெண்கள் தரு.

இ-ம்-காம்போதி-தாளம்-ஏகம்.

பல்லவி.

பாலைக்குடித்திடுவீரே (பா)

அநுபல்லவி.

பாலைக்குடித்திடுவீர் பாலகரேபலந்தரும்
ஜாலம்செய்யாமலேயுண்ணும் ஜடுதியில்பசிதீரும். (பா)

சரணம்.

மெத்தப்பசித் திருக்கிறீர்
சித்தங்குளிரச்செய்ய சிவசண்முகமாய்வந்த
முத்தரேமொழியக்கேளீர் முற்றுங்களைபோக்க இந்த (பா)
கொங்கையில் பால்பெருகுதே
உங்கள்கருணையாலே மங்களமாகமிகவே
துங்கமுடனின்றுகாரும் எங்கள்துயரேகிடவே. (பா)

## கார்த்திகைப்பெண்கள் விருத்தம்.

தட்டுறுதிகழ்களோடு தண்மலர்தழைத்துநாளும்
மட்டுலாங்கடப்பநீழல் வருவிக்கும்சரவணத்தில்
இட்டமாய்விளையாடல்செய் திருப்பதால்தாமரைப்பூந்
தொட்டியிலிட்டுநாமும் துலங்கத்தாலாட்டுவோமே.

(கார்த்-வ-ம்.) அடி அம்மமார்களே நாம் தாமரைப் புஷ்பத்தினால் தனித்தனி தொட்டில்செய்து சுத்தசுயம்பிரகாசமாய்வந்த குழந்தைகளை அதிலிருக்கச்செய்து தாலாட்டுவோம் வருவீர்களம்மா.

## கார்த்திகைப்பெண்கள் தரு.

இ-ம்-ஆனந்தபைரவி.

ஆரார்தானறிவாரோஉன்பெருமை ஆரார்தானறியாரோ
கராவிடிலென்செய்வோம். கண்மணியேகண்வளரீர்
(மற்)தாமரைப்பூந்தொட்டிலிலே தாங்கியுனைவளர்த்திட்டேன்
காமனையெரித்தோன்சேயா கடவுளரேகண்வளரீர்

(மற்.)தேவர்கள்முறைக்கிரங்கிஇங்கு தீர்க்கவந்தபாலகனே
ஆவதழிவதெல்லாம் அறிவோனேகண்வளரீர்
(மற்.)சீரருள்சிறந்தோங்க நீர்சீறுமனற்பொறியாக
சூரனுக்காயுதித்துவந்த சூரசம்மாராகண்வளரீர்
(மற். )வாயுவடவனுமாக வருந்திகெங்கைகொண்டுவந்து
சாயவிடசரவணத்தில் சார்ந்தவரேகண்வளரீர்
(மற்.)இகபரமிரண்டிற்கும் நல் இனிதுஜெயங்கோரிவந்த
பகவனேபசிதணித்தீர் பண்புடனேகண்வளரீர்

(கார்த்-வ-ம்.) அடியம்மா என்குழந்தை மெய்மரந்து நித்திரைபோகுதடி.

(மற்-வ-ம்) இதோபாரடி என்குழந்தை நித்திரையிலிருந்தெழுந்து நன்ருய் பேசுகிறது.

(மற்-வ-ம்) அடி அம்மமார்களே என்குழந்தை எழுந்து விம்மி அழரதடி எவ்வளவு சமாதானம் சொல்லியும் அதிகமாயழரதடி இதற்கென்ன செய்வது.

(மற்-வ-ம்.) அம்மம்மா என்குழந்தை எழுந்து தத்தடியிட்டு நடக்கிறது பாரடி.

(மற்-வ-ம்.) அம்மா இந்தகுழந்தை நிற்கக்கூடாமல் பொத்துபொத்தென்று விழுந்து விடுதடி.

(மற்-வ-ம்.) அடி அம்மா பாலேநன்ருய்க் குடித்து பலமில்லாததுபோல் விழுகிறதடி.

(மற்-வ-ம்.) அம்மா என்குழந்தை மஞ்சாடி ஆடுதுபார்.

(மற்-வ-ம்.) அம்மமார்களே என்குழந்தை செய்த வேலேயை கேட்டீர்களா பொய்கையில் பாய்ந்து ஜலத்தை சேராடிவந்து நிற்கின்றதடி.

(மற்-வ-ம்.) என்குழந்தைசெய்த வேடிக்கையைக் கேட்டீர்களா என்முலேக்காம்பைப் பிடித்து இழுத்து இழுத்து குதித்து சந்தோஷமுண்டாகி கூத்தாடுதடி.

(மற்-வ-ம்.) அம்மா என்குழந்தை பால்குடிக்கிறதும் அம்மாணீராடுகிறதும் தவிர துஷ்டதனம் கிடையாதடி.

(மற்-வ-ம்.) இதோ பாருங்களடிஎன்குழந்தை ஓடிஒளிப்பங்காட்டி பிடிக்கப்போனல் அகப்படாமல் ஒடுகிறது.

(மற்-வ-ம்.) என்குழந்தை அழுதுகொண்டே வருகிறதேஎடுத்தாலென்னடி.

(மற்-வ-ம்.) அடி அம்மமாரே என்னடி கணக்கில்லாதகுழந்தைகள் நமது கண்ணுக்குப் புலப்படுகிறதே.

(மற்-வ-ம்.) அம்மா இந்தகுழந்தைகள் பரம்பொருளாகிய சர்வஞ்யனனவன் குமாரதேவராக தாம்எவ்வுயிரினிடத்தும் பொருந்தி நடப்பிப்பதைப்போல இத்தகைய அதிசய திருவிளையாடல்களை தமது மாயாவிலாசத்தாற்காட்டி நடிக்கின்றாரடி.

(மற்-வ-ம்.) அடி அம்மமார்களே இதுகளை குழந்தைகளென எண்ணாமல் வழிபடவந்த இஷ்ட்டதெய்வத்தைப்போலக்கருதி பக்திவினையமாய்ப் போற்றிசெய்து வரவேண்டும்அம்மமார்களே.

(மற்-வ-ம்,) அப்படியே போற்றிவரலாம் அம்மமார்களே.

## கார்த்திகைப்பெண்கள் தரு.

இ-ம்-அடாணா-தாளம்-ரூபகம்

பல்லவி.

முருகன்உருவிளங்கிவரும் பெருமை அந்த
மூவராலுமில்லை மொழியுந் திரமை. (முரு)

அநுபல்லவி.

அரிவையர்களருவருங்காண அகமுற்றியேமிகபற்றியே
ஆனந்தித்திடும் சரவண. (முரு)

சரணம்.

தேவர்க்குறைபோக்கத் தீவரமாகவே தேடிவந்தபாலன்மிக
ஆவலுடன்பார்க்க அன்புமிகுதியாய் ஆனந்திக்கும்சீலன்
சேவகம்பேசியே சீறுவோர்க்குக்காலன்
சிவபெருமானிடசேயன் இந்திரஜாலன்
தவத்தைப்பெருக்கித் தழைக்கக்கார்க்கும்லோலன்
தரணிதனிலுரமாகவே தான்வந்தானதிலீலன். (முரு)

அண்டமாயிரத்தெட் டாண்டிடும்திசூர
அசுரனைநேரிடக் கொல்ல அந்த
அவுணர்யாவரையுமடியோடறுத்திட அவதாரம்செய்திட்டநல்ல
ஆதிசிவசங்கர னெனெவேசொல்ல
அதிசயிக்கயாரும் ஆதரிக்கவல்ல
அன்பரிருதயம் அகலாமலேபுல்ல
அருவத்தையுருவத்தை அடைந்தோங்கும்சிறுபிள்ளை. (முரு

## இந்திரன் விருத்தம்.

நறுமலர்வாசம்வீசும் நலம்பெறுசரவணத்தில்
உறுதிகொள்பாலனகி உண்மையைவிளக்கவாழும்
சிறுவனேயனந்தரூபஞ் சிறப்புடனெடுத்துயாரும்
அறுதியின்பங்கொள்ள ஆடுதல்பார்த்திட்டோமே.

(இந்-வ-ம்.) தேவர்களே சரவணப்பொய்கையில் விளங்கும் சுப்பிரமண்யரானவர் குழந்தைப் பருவமாயிருந்த ஒருவரே பல கோடி சிறுபிள்ளைகளாகநின்று நாமனைவரும் பார்த்திருக்க ஒரு நிமைப்போதில் அளவுபடாத பேதாபேதங்களைக் காட்டினர் இவர்பெருமைஙய நம்போலியற்கு அரியப்படுவதன்று இத்தகைய மாயைப்பெருக்கினைப்போல முடிப்பது எத்தகையருக் கேனும் அரிது அரிது இத்திருவிளையாடல்களை செய்தவர் ஒப்பற்ற பரமசிவதோற்றமல்லாது வேரல்ல இனிநமக்கு யாதுங்குறைவில்லை தேவர்களே.

(பார்ப்பதி-வ-ம்) ஆஆ அந்ததேவர்கள் நமதுநாயகரிடத்தில் வந்தித்து கேட்டுக்கொண்டபடி அவர் தன்னிடத்தி லுதிக்கும்படி உற்பத்திசெய்த குமாரனை என்னிடத்தில் உதிக்கவொட்டாமல் தடைசெய்த இந்திரன் பிரமன் விஷ்ணு மற்றதேவர் முதலியவர்களுடைய தேவிமார்களுக்கு இத்தினமுதல் புத்திரசந்தானமில்லாமல் போகக்கடவது இப்பொழுது ஏற்பட்ட தொகை முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளுடன் இருக்கக்கடவது நாம் இப்பொழுது நமது நாயகர் திருச்சபைக்கிச் செல்வோம்.

## பார்ப்பதி தரு.

இ-ம்-இந்துஸ்தான்-தாளம்-சாப்பு.

ஆ ஆ என்னுயகரே அஞ்சினேனும்மாலேயானும்
ஆவல்தீர்க்கதேவருக்காய் அளித்தனற்பொரியால்வெந்தேன்
அடைந்தேனிங்கனல்மாரவே ஆதரித்திடுவீர்நொந்தேன்.(ஆ ஆ)

(பார்ப்-வ-ம்.) நாயகா நமஸ்கரிக்கின்றேன் தேவர்களனைவரும் பணிந்து தமது குறைப்பாடுகளைவிண்ணப்பம் செய்துவேண்டிய காரணத்தினல் தேவரீர் கடாக்ஷித்த சுயஞ்சோதிபடிவமாகிய பொறிகளினது ஊஷ்ணத்தினல் பயப்பிராந்திகொண்டு சரீரமுற்றும் வெந்து நொந்ததால் தேவரீரைப் பிரிந்தோடியயான் பொறி

களின்வேகம் அடங்கினபடியால் மீளத்திருச்சபைக்கி வந்தேன் ஆதரிப்பீர் நாதா.

(பரம-வ-ம்.) பார்ப்பதி எனதிடமாகத்தமருவாய்.

(பரம-வ-ம்.) நாயகி சொர்ன்ன சரங்களில் கின்கிணிகளாகக் கோத்திருந்த சதங்கைகளினின்று நவமணிகள் நமதெதிரில் சிதறிக்கிடக்கும் காரணம் யாது தெரிவிப்பாய் நாயகி.

(பார்ப் வ-ம்.) நாதா அக்கினிஜுவாலை மீறினபோது ஓடிய காலத்தில் என்பாதச் சிலம்பிலிருந்த மணிகளில் நவமணிகள் சிதறினதாகத் தெரிகிறது பிராணேசா.

## பரமசிவன் தரு.

இ-ம்-காம்போதி-தாளம்-ரூபகம்.

மணிமணிகளில்காண மனம்பூணநலந்தோண
மதிமயங்குதே மிகநாண
மங்கைவடிவமிதிலே மாராமல்தோற்றுதே
மதித்தவுருவையழைக்க இனி
மானிலமெங்குந் தழைக்க
வாரும்பெண்களேஎன்றழைப்போம் மனந்தழைப்போம்சற்றுபார்ப்போம்
வருவார்கள்குறையாவுந் தீர்ப்போம்
வாடுறூர்தேவர்கள் வையகமுழுவதையும்
வாதைபட்டுமிக் சொக்கி பாபி
வாதாடும்சூரனல் வெழ்க்கி.

(பரம-வ-ம்) நவமணிகளிலும் என்மாதுருக்கொண்ட மாதர்களே வாருங்கள்.

(நவசத்-வ-ம்.) சுவாமி நமஸ்கரிக் கின்றேம்.

மணியுருவாய்ந்தநீங்கள் மகிழுங்கள்மிகுதிங்கள் மன
மாராதெப்போதும் வாழுங்கள்
மடமாதரேவுங்கள்மேல் மையல்கொண்டேன்பூர்க்க
மனந்தளர்ந்தேனடி நீங்கள்
மயங்காதிர்க ளிங்குகூடி.

## பார்ப்பதி விருத்தம்.

சுந்தரவடிவுபெற்று சோராமலிங்குளன்போல்
வந்தசக்களத்திமாரே வகையுடன்சொல்லக்கேளீர்
பந்தமாயெனதுநாதன் பலித்திடச்செய்தகர்ப்பம்
விந்தையாய்வெளிவராமல் வெகுகாலமிருப்பீர்தானே.

